# தர்மசக்கரம்









பிங்கல ஞ ஐப்பசி மீ        சக்கரம் 26 ஆரம் 10

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**

திருப்பராய்த்துறை - 639 115    திருச்சி ஜில்லா

15.10

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 26 | பிங்கள ௵ ஐப்பசி ௴ | ஆரம் 10 |
|---|---|---|


## பொருளடக்கம்



## சந்தா விவரம்

**1. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**2. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்துகொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**3. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00 வெளி நாடு வருட சந்தா ரூ. 20-00**

## அந்தர்யோக விவரங்கள்

மதுரையில் 23—10—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோவில் வடக்காடி வீதியில் உள்ள திருவள்ளுவர் கழகம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் நண்பகல் 1-00 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

திருநெல்வேலி ஜில்லா—விக்கிரமசிங்கபுரத்தில் 29—10—77 சனிக்கிழமை

*இடம்: சிவந்தியப்பர் கோவில்*

*நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

மதுரை ஜில்லா—சுருளியில் 30—10—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: சுருளி தீர்த்தத்துக்கருகில்*

*நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

கரூரில் 6—11—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: பசுபதிபாளையம் விவேகானந்த கல்விநிலையம்*

*நேரம்: மாலை 5-00 மணிமுதல் 7-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

சேலம் ஜில்லா—ஓமலூரில் 6—11—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: குப்புசாமி செட்டியார் ஆரம்பப்பள்ளி*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

வட ஆர்காடு ஜில்லா—ஆரணியில் 13—11—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: கோட்டை ஸ்ரீ கைலாசநாதர் ஆலயம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்





# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

| சக்கரம் 26 | பிங்கள ஹூ ஐப்பசி மீ | ஆரம் 10 |
|---|---|---|


## பிரார்த்தனை

अज्ञानतिमिरान्धस्य ज्ञानाञ्जनशलाकया ।
चक्षुरुन्मीलितं येन तस्मै श्रीगुरवे नमः ॥

அக்ஞானதிமிராந்தஸ்ய ஞானாஞ்ஜனசலாகயா ।
சக்ஷுருன்மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥

ஞான மைதீட்டிய கோல்கொண்டு கண் திறக்க வைத்து அக்ஞான இருளகற்றியவர் குரு. அன்னவருக்கு நமஸ்காரம்.

பந்தமெலாந்தீரப் பரஞ்சோதி நீ குருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

பேரறிவில் புதைந்திருப்பவன் பரத்தை எட்டுகிறான்.

சத்தியத்தைக் கடைப்பிடிப்பவன் சாந்தி அடைகிறான்.

இறைபணியில் தன்னை மறந்திருப்பவன் பாக்கியவான்.

ஏமாற்றம் மனப்பான்மையைத் திருத்தியமைக்க உதவுகிறது.

கடவுளின் அனுக்ரஹத்தை நம்பியிருப்பவனே அமைதியுறுகிறான்.

தீமை விரைந்து பறக்கிறது. ஆனால் அருளோ அமைதியாக நகருகிறது.

சாஸ்திரப் பிரமாணம் இடம் கொடுத்தாலும் பிழைபோவதற்கு நீ இடம் தராதே.

மனிதனிடம் புதைந்துள்ள ஆற்றல் அனைத்தையும் அளக்க அவனுக்கு இயலாது.

கடவுள் நம்பிக்கை வைத்திருக்க வல்லவன் எளியவர்களைத் தாக்க மாட்டான்.

கொடுங்கோலுக்கு அடிமைப்பட மறுக்கிறவன்மீது கொடுங்கோலாட்சி செல்லாது.

சோம்பலை அகற்றி ஞான ஒளியில் விழித்திருப்பவன் குறிக்குப் பக்கத்தில் வந்துள்ளான்.

ஒருவனுடைய கொள்கையை மற்றொருவன்மீது திணியாதிருப்பதே சகிப்புக்கு அறிகுறியாம்.

பராசக்தியைச் சார்ந்திருப்பவனுடைய உடல் அழிந்து போகுமிடத்தும் அவன் துன்பத்துக்கு ஆளாகான்.

நோயாளியின் துராசாரத்துக்கு ஆதரவு கொடுக்கிற டாக்டர் தன்னையும் நோயாளியையும் கீழ்மைப்படுத்துகிறான்.

உடல் உணர்ச்சி கூச்சலிடுகிறது; அது முரட்டுத்தனமானது. ஆன்ம உணர்ச்சி அமைதியானது; அது மகிமை நிறைந்தது.

பேராசை பிடித்திருந்த மன்னாதி மன்னர்களெல்லாம் பின்னணியில் தள்ளப்பட்டனர். அதை எண்ணிப்பார்த்து அடங்கியிரு.

வாழ்நாள் முழுதிலும் வாய்பொத்தி இரு. கண்ணையும், காதையும் அடக்கி ஆள். அப்பொழுது நீ துன்பத்துக்கு ஆளாகமாட்டாய்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

ராம்லாலர் இப்போது அறைக்குள்ளே பிரவேசித்தார். அவரைப் பார்த்துப் பரமஹம்ச தேவர் பகர்ந்ததாவது : ''அன்னை பராசக்தியைக் குறித்து நீ பாடல் ஒன்று பாடுவாயாக. அவளுடைய வழிபாட்டுக்குரிய ஒரு நல்ல நாள் இன்று ஆகும்.''

ராம்லால் பாடியதாவது : ''தூரத்தில் தென்படுகின்ற அந்த மாது யார்? போர்க்களத்துக்கு அவள் பொலிவுகொடுக்கின்ருள். புயலாக வீசுகிற கார்மேகத்தை விடக் கரிய நிறம் படைத்தவளாக அம்மாது தென்படுகிருள். பளீர் என்று வீசிக்கண்கூசும்படிசெய்கின்றமின்னலுக்கு நிகராக அவளுடைய பல் வரிசை தென்படுகிறது! அவள் இங்குமங்கும் தாவுகின்ற பொழுது விரித்துப் போட்டிருக்கின்ற அவளுடைய கூந்தல் அவளுக்குப் பின்னல் பறந்து போவது போன்று தென்படுகிறது. தேவர்களுக்கும் அசுரர்களுக்குமிடையில் நிகழ்கிற போர்க்களம் இது. எதற்கும் அஞ்சாதவளாக இங்கே அவள் ஆடித்திரிகிருள். அவள் புரிகிற நகைப்பு பயங்கரமானது. பறந்து ஓடுகின்ற அசுரர்களை அவள் மாய்த்துத் தள்ளுகிருள். அவளிடத்துக் கிளம்புகிற ஜுவாலை போரின் பயங்கரத்தை நன்கு விளக்கிக் காட்டுகிறது.''

ராம்லால் மற்றும் ஒரு பாடல் பாடினர். அதில் அடங்கியிருந்த கருத்தாவது :

''பயங்கர சொருபமாகத் தென்படுகிற இந்த மாது யார்? நள்ளிருள் ஆகாயத்துக்கு நிகராக அவளுடைய மேனி கறுத்து இருக்கிறது. போர்க்களத்திலே தாண்டவமாடுகின்ற இந்த மாது யார்?'' ராம்லால் பாடிய பாடலுக்கு ஒத்த பாங்கில் பரமஹம்ச தேவர் நடனம் புரிந்தார். பின்பு அவர் தாமே பாடியதாவது :

''கருவண்டுக்கு நிகராக என்மனம் இருக்கிறது. நீலோத்பலத்துக்கு நிகராக மிளிர்கின்ற ஸ்யாமா தேவியின் திருவடிகளிடத்து இந்த மனது கவர்ந்து இழுக்கப்படுகிறது. அவளுடைய முன்னிலையில் அது பரமானந்தம் அடைந்திருக்கிறது. சிவனுடைய சக்தி சொருபமாகக் காளிகாதேவி இலங்குகின்ருள். நீலோத்பலத்துக்கு நிகரான திருவடிகளை அவள் உடைத்திருக்கிருள். ஆசை வடிவெடுத்திருக்கிற வண்டுக்குப் புஷ்பங்கள் சுவையற்றவைகள் ஆகின்றன. என் அன்னையின் திருவடிகள் கன்னங்கரேலென்று இருக்கின்றன. எனது மனது என்னும் வண்டும் அதே விதத்தில் கன்னங்கரேலென்று இருக்கிறது. கரிய நிறம் படைத்திருக்கிற ஒன்று கரிய நிறம் படைத்திருக்கிற மற்றென்றோடு இனிது இணங்குகிறது! அன்னையைப்பற்றிய ஆச்சரியமான இந்த அதிசயம் மானுடர் கண்களுக்குப் புலப்படுகிறது. அதற்கப்பால் ஊடுருவிப் பார்க்க இயலாதவைகளாய் இந்தக் கண்கள் தோற்கடிக்கப்பட்டுத் திரும்பி வருகின்றன. ஆயினும் பக்தனொருவனுடைய ஆசைகள் இறுதியில் நிறைவேறப் பெறுகின்றன. பேரானந்தம் என்னும் பெருங்கடலில் அவன் நீந்தி விளையாடுகின்ருன். இவ்வுலக இன்ப துன்பங்கள் அவனை அசைக்கமாட்டா.''

இன்னிசைக்கு ஒத்த பாங்கில் நடனம் புரிந்த பரமஹம்சதேவர் பிறகு கட்டிலின்மீது அமர்ந்தார். அவரோடுகூடி நடனம் புரிந்த பக்தர்கள் தரையின்மீது அமர்ந்தனர். மகேந்திரரிடம் பரமஹம்சதேவர்பகர்ந்ததாவது:''இன்று பிற்பகலில் நீ இங்கு வந்து சேரவில்லை. அது ஒரு போக்கில் உனக்கு நஷ்டமாகும். தேவி மாஹாத்மியம் இன்னிசைக் கருவிக்கு ஒத்த பாங்கில் ஓதப்பெற்றது. அது செவிக்கரிய விருந்தாயிருந்தது. அப்போது நீ இல்லாது போய்விட்டாய்.''

அன்பர்களுள் ஒருசிலர் அம்பிகையின் சந்நிதியில் வந்தனை, வழிபாடு செலுத்த சந்நிதியை நோக்கிச் சென்றனர். கங்கா நதிக்குச் செல்வதற்காக அமைந்துள்ள படிக்கட்டில் ஆங்காங்கு அமர்ந்துகொண்டு ஏனைய பக்தர்கள் அமைதியாக ஜபம் புரிந்துகொண்டு இருந்தனர். அப்பொழுது இரவு சுமார் பதினெரு மணி ஆகும். பராசக்தியைப்பற்றித் தியானிப்பதற்கு முற்றிலும் ஏற்ற புண்ணிய காலமாக அது இருந்தது. கங்காநதி பொங்கி மேல்

நோக்கி ஓட ஆரம்பித்தது. கோயிலிலே ஏற்றி வைக்கப்பட்டிருந்த தீபங்களுள் சில அந்நதியின்கரிய நிற நீரிலே பிரதிபிம்பிக்கலாயின.

இப்பொழுது மகேந்திரர் அம்பிகையின் சந்நிதிக்குச் சென்றார். அம்பிகையின் திருவுருவத்தை அவர் ஆழ்ந்து பார்த்தவண்ணமாய் இருந்தார். ராம்லால் கையில் புஸ்தகம் ஒன்றை ஏந்திக்கொண்டு சந்நிதிக்கு வந்து சேர்ந்தார். வழிபாட்டுக்குரிய விதிகளை விளக்குகின்ற நூலாக அப்புஸ்தகம் அமைந்திருந்தது. வாயிலின்கண் நின்றுகொண்டிருந்த மகேந்திரரிடம் கோயிலின் உள்ளே வரலாமே என்று ராம்லால் இயம்பினார். அப்படி அவர் இயம்பியது அன்னை பராசக்தியின் திருவருள் என எண்ணிக்கொண்டு மூல ஸ்தானத்தின் கண் அவர் நுழைந்தார். அம்பிகையின் திருவுருவம் அற்புதமாக அலங்கரிக்கப்பட்டிருந்ததை அவர் பார்த்தார். மேல் தளத்திலிருந்து தொங்கவிடப்பட்டிருந்த பெரிய தீபம் ஒன்று கர்ப்பகிருஹத்துக்குச் சுடர் ஒளியைப் பெருமிதமாக வீசிக்கொண்டிருந்தது. அம்பிகையின் திருவுருவத்துக்கு எதிரே இரண்டு குத்துவிளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. ஆராதனைக்குரிய புஷ்ப வகைகளும் நைவேத்திய வகைகளும் தரையின் மீது பரப்பி வைக்கப்பட்டிருந்தன. செம்பரத்தைப் புஷ்பங்களும் வில்வ தளங்களும் அம்பிகையின் திருவடிகளை அலங்கரித்துக்கொண்டிருந்தன. அம்பிகையின் கழுத்திலே அற்புதமான பூமாலைகள் சில அணியப் பெற்றிருந்தன. உள்ளே சுவரிலே மாட்டிவைக்கப்பட்டிருந்த சாமரத்தை மகேந்திரர் தற்செயலாகக் காணலுற்றார். பல தடவைகளில் அந்தச் சாமரத்தை வீசிப் பரமஹம்ச தேவர் அம்பிகையை ஆராதித்து வந்தது அவருடைய ஞாபகத்துக்கு வந்தது. தாமும் அந்தச் சாமரத்தை எடுத்து அம்பிகைக்கு வீசலாமா என்று தயக்கத்தோடு அவர் ராமலாலைக் கேட்டார். அந்தப் பூஜாரி அதற்கு அனுமதி கொடுத்தார். மகிழ்வோடு மகேந்திரர் அம்பிகைக்குச் சாமரம்வீசிக்கொண்டிருந்தார். முறையான அம்பிகை வழிபாட்டின் முற்பகுதி அப்பொழுது ஆரம்பிக்கப்பட்டது.

வழிபாட்டுக்குப் பிறகு பக்தர்கள் பரமஹம்சதேவரின் அறைக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்கள். அடுத்தநாள் சிந்தி பிரம்ம சமாஜத்தைப் பார்வையிட வரவேண்டுமென்று பரமஹம்சதேவருக்கு வெங்கிப்பால் என்பார் அழைப்பு அனுப்பியிருந்தார். ஆனால் அக்கடிதத்தில் அவர் தேதியைக் குறிப்பிடுதலில் பிழைபோய்விட்டார்.

பரமஹம்சதேவர் (மகேந்திரரைப் பார்த்து): ''வெங்கிப்பால் எனக்கு அழைப்பு அனுப்பியிருக்கிறார். ஆனால் தேதியை ஏன் அவர் பிழைபடக் குறித்திருக்கிறார்?''

மகேந்திரர்: ''தேதியை அவர் சரியாக எழுதவில்லை. கடிதத்தை அவர் அஜாக்கிரதையாக எழுதியிருக்கிறார்.''

இங்ஙனம் உரையாடிக்கொண்டிருந்த பொழுது பரமஹம்சதேவர் தம்முடைய அறையின் நடு மையத்தில் நின்றுகொண்டிருந்தார். அப்பொழுது பாபுராம் அவர் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தார். அந்தச் சிஷ்யருடைய மேனியின் மீது பரமஹம்ச தேவருடைய கரம் படிந்திருந்தது. திடீரென்று அவர் சமாதிநிலை எய்தினார். அவரைப் பார்த்த வண்ணமாகச் சிஷ்யர்கள் அவரைச் சூழ்ந்து நின்றுகொண்டிருந்தனர். பரமஹம்சதேவருடைய இடது கால் சற்று முன்னோக்கிப் படிந்திருந்தது. தோள் சிறிது சாய்ந்து தென்பட்டது. பாபுராமுடைய கழுத்தின் மீது காதுக்குப் பக்கத்தில் அவருடைய கரம் நாட்டப்பெற்றிருந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு சமாதி நிலை கலைந்து புறவுலக ஞாபகத்துக்கு அவர் மனது திரும்பியது. மற்ற கரத்தைத் தமது மோவாய்க்கட்டையின் மீது வைத்துக்கொண்டு ஏதோ ஒரு விஷயத்தை அவர் எண்ணிக்கொண்டிருந்தவர் போன்று தென்பட்டார். பிறகு புன்னகை பூத்தவராகப் பக்தர்களோடு அவர் உரையாடினார்.

பரமஹம்சதேவர்: ''யாவும் என் காட்சிக்கு எட்டுவனவாயின—இங்கு வருகிற அன்பர்கள் ஆத்மீகத்துறையில் முன்னேறி வருவது விளங்கிற்று. ராக்கால், சுரேந்திரன், பாபுராம், மகேந்திரன் முதலாயினோர் அடைந்து வரும் ஆத்மீகப் பண்பாடுகள் என் காட்சிக்கு எட்டுவனவாயின.''

ஹாஸ்ரா: ''என் விஷயமோ?''

பரமஹம்சதேவர்: ''ஆம். உன் விஷயமும் காட்டப்பட்டது.''

*ஹாஸ்ரா:* ''இன்னும் பல இடைஞ்சல்கள் எனக்கு அமையப்போகின்றனவா?''

*பரமஹம்சதேவர் :* '' இல்லை.''

*ஹாஸ்ரா:* '' நரேந்திரனைப்பற்றிய விஷயம் யாது ?''

*பரமஹம்சதேவர்:* ''இக்காட்சியில் அவனை நான் காணவில்லை. ஆனால் அவனைப்பற்றி நான் இயம்பமுடியும். ஒரு சிறிய உலக இக் கட்டில் அவன் அகப்பட்டுள்ளான். ஆயினும் இவர்கள் எல்லாரும் ஞான வெற்றி அடை வார்கள் என நான் காணலானேன். (மகேந் திரரைப் பார்த்து) இவர்கள் எல்லாரும் தங்கள் நிஜசொருபத்தை மறைத்து வைத்திருக்கிறார் கள் என்பதையும் நான் காணலானேன்.''

வியப்புற்றவர்களாக இக்கூற்றுக்களைப் பக் தர்கள் கேட்டுக்கொண்டிருந்தனர். குறி சொல் லுபவனுக்கு நிகராக இவர் இயம்பிக்கொண் டிருந்ததாகத் தோன்றிற்று.

*பரமஹம்சதேவர்:* ''பாபுராமனைத் தொட்டுக் கொண்டிருந்ததின் விளைவாக அத்தகைய பர வசநிலை எனக்கு உண்டாயிற்று.''

*ஹாஸ்ரா:* ''இவர்களுள் முதன்மை வகிப் பவர் யார்?''

*பரமஹம்சதேவர்:* ''சிறிது நேரம் அமைதி யுற்றிருந்தார். பிறகு அவர் இயம்பியதாவது: நித்தியகோபால் போன்றவர்கள் ஒருசிலர் வாய்க்கவேண்டுமென்று நான் விரும்பினேன்.'' மீண்டும் ஏதோ எண்ணத்தில் ஆழ்ந்திருந்தவர் போன்று அவர் தென்பட்டார்.

அவர் நின்றுகொண்டே இருந்தார். அவர் பகர்ந்ததாவது: ''ஆதாரசேனருடைய உலகக் கடமைகள் சிறிது குறையவேண்டுமென்று நான் விரும்பினேன். ஆனால் அவன் தன் னுடைய கடமைகளைக் குறைப்பானாகில் ஆங் கில அதிகாரி அவனைத் திட்டுவான். 'என்ன மடமையில் நீ மூழ்கியிருக்கிறாய்?' என அவன் இயம்பக்கூடும்!'' (எல்லாரும் புன்னகை பூக் கின்றனர்)

இப்பொழுது பரமஹம்சதேவர் சிறிய கட்டி லின்மீது அமர்ந்தார். அன்பர்கள் எல்லாரும் தரையின்மீது அமர்ந்தார்கள். பாபுராமனும் கிஷோரியும் பரமஹம்சதேவரின் பாதங்களை இலேசாக அமுக்கிக்கொடுக்க விரைந்தனர்.

*பரமஹம்சதேவர் (கிஷோரியைப் பார்த்து):* ''என்ன விஷயம் இன்று? ஏன் இவ்வளவு தூரம் பணிவிடையில் ஈடுபட்டிருக்கிறாய்?''

ராம்லால் அறையினுள்ளே வந்து தம் முடைய நெற்றி தரையில் படும்படி பரமஹம்ச தேவரை வீழ்ந்து வணங்கினார். பிறகு அவரு டைய திருவடிகளைப் பக்தி பூர்வமாகத் தொட் டார். ஆலயத்தின்கண் அம்பிகையின் பூஜையில் ஈடுபடுவதற்கு முன்பு பரமஹம்சதேவருடைய அனுமதியைப்பெறுவதற்கு இங்ஙனம்செய்தார்.

*ராம்லால்:* ''பூஜையை முறையாக நிறை வேற்றுவதற்கு எனக்கு அனுக்கிரஹம் பண் ணுங்கள்.''

'ஓம் காளி' என்று பரமஹம்ச தேவர் இரண்டு தடவை இயம்பினார்.

சிரத்தையோடு பூஜையை நிறைவேற்ற நள் ளிரவு வந்தது. அம்பிகை காளிகாதேவியின் சந்நிதியில் பூஜை துவங்கிற்று. அதைக்காண் பதற்குப் பரமஹம்சதேவர் ஆங்குச் சென்றார். பூஜை நிகழ்ந்து கொண்டிருந்த பொழுது அம் பிகையின் திருவுருவத்துக்கு அருகில் அவர் நின்றுகொண்டு இருந்தார். நெடுநேரத்துக் குப்பிறகு அவர் தம் அறைக்குத் திரும்பினார். அதிகாலை இரண்டுமணி வரையில் பக்தர்கள் பலபேர் ஆலயத்தில் தங்கியிருந்தனர். ஹரி பாதர் வந்து அம்பிகையின் பிரசாதத்தைப் பரம ஹம்ச தேவருடைய அறைக்கு எடுத்துச் செல் லும்படி வேண்டினார். ஆங்குக் குழுமியிருந்த அன்பர்களுக்கு அது வழங்கப்பட்டது. அதன் பிறகு பக்தர்கள் ஆங்காங்கு சிறிது நேரம் நித் திரைபண்ணச் சென்றார்கள்.

பொழுது புலர்ந்தது. அதற்கு முன்பு அதி காலை வழிபாடு ஆலயத்தில் நிறைவேறியது. ஆலயத்துக்கு எதிரேயுள்ள வெட்ட வெளியில் நிகழ்ந்த நாடகமும் முடிவுற்றது. பரமஹம்ச தேவரைப் பின்பற்றி மகேந்திரர் முற்றத்துக்கு வந்தார். ஆங்கிருந்து கல்கத்தாவிற்குப்போக அவர் எண்ணினார்.

*பரமஹம்ச தேவர் :* ''நீ இப்பொழுது ஏன் புறப்பட்டுப் போகவேண்டும்?''

*மகேந்திரர் :* ''பிற்பகலில் தாங்கள் சிந்தி என்னும் ஊருக்குப்போகத் திட்டமிட்டிருக் கிறீர்கள். நான் அங்குவர எண்ணியுள்ளேன். அதற்கு முன் சில மணிநேரம் வீட்டுக்குச் சென்று வர நான் விரும்புகிறேன்.''

---

# பராபரக் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

329. சிந்தை மயக்கமறச்
சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையும்
நான் தந்தேன் பராபரமே.

பிரகிருதி, புருஷன் ஆகிய இரண்டு தத்துவங்களின் கூட்டுறவை முன்விட்டு ஜீவவியக்தி வடிவெடுக்கிறது. ஆதலால் ஜீவாத்மாவிடம் பிரகிருதியின் இயல்பையும் ஆத்ம சைதன்யத்தையும் இணைத்து வைத்துப் பார்க்கிறோம். உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் கூடி உயிர் மெய்யெழுத்தாவதற்கு நிகர் இது. உயிர் எழுத்து ஆத்ம தத்துவத்திற்கு விளக்கமாக இருக்கிறது. மெய் எழுத்துக்கள் பிரகிருதி தத்துவத்திற்குச் சான்றுகள் ஆகின்றன. மெய் எழுத்துக்கள் எண்ணிக்கையில் அதிகரிப்பதற்கேற்ப உயிர் மெய் எழுத்துக்களும் எண்ணிக்கையில் அதிகரிக்கின்றன. அதிகப்படியான மெய்யெழுத்துக்களை உடைத்திருப்பது வடமொழியாகிய சம்ஸ்கிருதம். ஆதலால் ஓசையின் எல்லாப் படித்தரங்களையும் அம்மொழியில் காணலாம். இனி எண்ணிக்கையில் அடங்காத ஜீவ வியக்திகள் இயற்கையின்கண் தென்படுகின்றன. ஜீவாத்மாக்களுள் உச்ச நிலையை எட்டியிருப்பவன் மனிதன். அவனுடைய மனபரிபாகமே அதற்குக் காரணமாகிறது. மனதைப் பண்படுத்துவதற்கு ஏற்ப மனிதன் மேலோன் ஆகிறான். மனதுக்குச் சிந்தை என்பது மற்றொரு பெயர். சிந்தையிலே மயக்கமும் தெளிவும் மாறி மாறியமைகின்றன. அப்படி அமைவதுதான் அதன் போக்கு. சிந்தை பிரகிருதியின்கண் நாட்டம் கொள்ளுகிறபொழுது அது மயக்கமுறுகிறது. அந்த மயக்கத்துக்கு உட்பட்டவனாக ஜீவாத்மன் இவ்வுலக சம்பந்தமான இன்ப துன்பங்களுக்கு ஆளாகிறான். சிந்தையானது பிரகிருதி மோகத்திலின்று தன்னை மீட்டெடுத்து ஆத்ம சொருபத்தில் நாட்டம் கொள்ளுமாகில் அது மேன்மையுறுகிறது. பிரகிருதி மோகம் ஆத்ம நாட்டம் ஆகிய இவ்விரண்டுக்கும் இடையில் ஊசலாடிக்கொண்டிருக்கும் ஜீவாத்மன் இடையிடையே ஆத்ம சாதனத்தில் ஈடுபடுபவனாகிறான். முக்த புருஷனோ பிரகிருதி மோகத்திலின்று தன்னை மீட்டெடுத்து நிரந்தரமாக ஆத்ம சொருபத்தில் நிலைத்திருக்கிறான். அப்படி நிலைத்திருப்பவனே முக்தியை நாடுகிற முமுட்சுகளுக்கு முன்மாதிரியாகிறான். அப்பெருநிலையிலிருக்கும் ஞானியை 'சின்மயமாய் நின்ற உன்னை' என்று தாயுமானவர் இந்தக் கண்ணியில் இயம்புகிறார். அப்பெருநிலையை அடையப்பெற்றுள்ள பரம புருஷன் ஒருவன் அந்நிலையை அடைய விரும்புகிற முமுட்சுவோடு நல்லிணக்கம் பூணுகிறான். அன்பு கூர்ந்து அன்னவன் செய்யும் செயலைத் 'தந்த உனக்கு' என்று தாயுமானவர் இந்தக் கண்ணியில் பாராட்டுகிறார். முக்த புருஷனுடைய பேரன்புக்கு இலக்காகிய தாம் தம்மையும் அப்பரம புருஷனிடம் ஒப்படைக்கிறார். அச்செயலை 'என்னையும் நான் தந்தேன்' என்று இக்கண்ணி விளக்குகிறது. தக தக வென்று எரிகிற தீயினிடத்து உலர்ந்த விறகுக்கட்டையைப் போட்டால் அதுவும் தீயாக மாறுகிறது. அதே விதத்தில் முக்த புருஷனோடு இணக்கம் வைக்கிற முமுட்சுவும் பிரகிருதியின் கூறுகளிலின்று அறவே தன்னை விடுவித்துக்கொண்டு சித்சொருபம் ஆகிறான். 'என்னை ஆட்கொண்டுள்ள அண்ணலே என்னை நான் உன்னிடம் ஒப்படைத்து ஆத்ம சொருபமாயுள்ள உன்மயமாய் நான் மாறியமைவேனாக' என்பது இக்கண்ணியின் கருத்து.

330. மைகாட்டு மாயை
மயக்கமற நீ குருவாய்க்
கைகாட்ட வுங்கனவு
கண்டேன் பராபரமே.

மைகாட்டுதல்—அக்ஞான இருள் சூழ்ந்திருத்தல். கைகாட்டுதல் — சின் முத்திரை தாங்கி இருந்து ஜீவ வியக்தியானது மும்மலங்களினின்று தன்னை விடுவித்துக்கொண்டு பரமாத்மாவோடு ஒன்றுபடுதல் என்னும் கோட்பாட்டை விளக்குதல்.

கனவு, நனவு ஆகிய இரண்டையும் ஆராய்ச்சி பண்ணுதல் அவசியமாகிறது. நனவு அல்லது ஜாக்ரதாவஸ்தையிலே ஸ்தூல சரீரமும், சூட்

சும சரீரமாகிய மனதும் சேர்ந்து செயல்படுகின்றன. ஜாக்ரதாவஸ்தையில் தென்படுகின்ற புறவுலகும் அவ்வுலகில் உள்ள உயிர் வகைகளும் காண்பவனுக்குப் புறம்பானவைகள். அவைகளை அவன் கண்டாலும் காணாதிருந்தாலும் உலகும், உயிர் வகைகளும், தம் போக்கில் இருந்து வருகின்றன. தூக்கத்தில் நாம் கனவு காண்கின்றோம். அக்கனவானது சொப்பனவஸ்தை என்று சொல்லப்படுகிறது. கனவில் தென்படுகின்ற ஜகத்தும், ஜீவர்களும் கனவு காண்கின்ற மனிதனுடைய மனதின் கூறுகளாம். அதாவது அவையாவும் அம்மனிதனுடைய மனோவிகாரங்களாம். அவனுடைய மனதுக்குப் புறம்பாக அவைகள் இல்லவே இல்லை. ஜாக்ரதாவஸ்தையில் தென்படுகின்ற ஊரும் உயிர்வகைகளும் காண்போனுக்குப் புறம்பானவைகள். சொப்பனவஸ்தையில் தென்படுகின்ற ஊரும் உயிர் வகைகளும் கனவுகாண்பவனுடைய மனதின் கற்பனைகளாம். அப்படிக் கற்பனைகளாய் இருந்தாலும் சொப்பனத்தில் ஒரு பிரயோஜனம் உண்டு. ஜாக்ரதாவஸ்தையில் மனிதன் ஒருவன் வளர்த்து வருகிற மனப்பான்மைகளே அவனுடைய சொப்பனவஸ்தையாக உள்ளத்தில் பிரதிபலிக்கின்றன. ஜாக்ரதாவஸ்தையில் சுத்தமான சித்தவிருத்திகளை உண்டுபண்ணுபவன் சொப்பனத்திலும் நல்ல கனவுகளைக் காண்கிறான். ஜாக்ரதாவஸ்தையில் பொருந்தாத சித்த விருத்திகளை வளர்த்து வருபவன் அதற்கேற்ற கீழ்த்தரமான கனவுகளைக் காண்கின்றான். சொப்பனவஸ்தையில் புதிய புதிய ஆத்ம சாதனங்கள் தோற்றத்துக்கு வருவதுமுண்டு. அப்படி வந்து அவைகளின் வாயிலாக மனிதனுடைய ஜீவிதம் மேலானதாகத் திருந்தியமைந்தால் அது சொப்பன தீட்சை என்னும் பெயர் பெறுகிறது. அத்தகைய சொப்பன தீட்சை ஒன்று இக்கண்ணியின்வாயிலாக விளக்கப்பெறுகிறது. தீவிரமான ஆத்ம சாதனங்கள் புரிந்து வருகிறவர்களுக்கு ஜாக்ரதாவஸ்தையில் சத்சங்கம் வாய்க்காவிட்டாலும் கனவின் வாயிலாக அது நிகழ்வதுண்டு. அத்தகைய கனவு மனிதனுடைய ஆத்மீக முன்னேற்றத்துக்குத் தூண்டுதலாக அமையுமானால் அது கிடைப்பதற்கரிய வாய்ப்பாகும் என்பது இக்கண்ணியின் கருத்து.

331. மால் வைத்த சிந்தை
மயக்கற என் சென்னிமிசைக்
கால்வைக்க வுங்கனவு
கண்டேன் பராபரமே.

மால்-உலக ஆசை.

இறைவன்பால் அமைந்துள்ள மகிமைகளுள் ஒன்று மோகன சக்தி என்பதாம். ஜீவகோடிகளனைத்தும் பிரபஞ்ச வாழ்க்கையில் மோகம் கொண்டிருக்கின்றன. அதனால் பிரபஞ்ச வாழ்வும் ஒழுங்காக நடைபெற்று வருகிறது. மோகன சக்திக்கு வசப்பட்டிருப்பதற்கிடையில் அதினின்று தான் விழித்து எழுந்திருக்க வேண்டுமென்றும் அத்தளையினின்று தான் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்றும் முமுட்சுவாக இருக்கிற ஆத்ம சாதகன் முயன்று வருகிறான். அவனுடைய முன்னேற்றத்துக்கு அறிகுறியாக உலகஆசைகள் படிப்படியாகமறைந்து வருகின்றன. திடீரென்றுஒருநாள் ஞானோதயம் உண்டாகிறது. தன்னை மனிதன் என்று எண்ணிக்கொண்டிருந்த சாதகன் திடீரென்று அம்மயக்கத்தினின்று விழித்து எழுந்திருக்கிறான். சச்சிதானந்தம் தன்னுடைய நிஜசொரூபம் என்பதை அறிய வருகிறான். இந்த ஞான விழிப்பு ஜாக்ரதாவஸ்தையில் வரலாம் அல்லது சொப்பனவஸ்தையில் வரலாம். விவேகி ஒருவனுக்கு ஜாக்ரதாவஸ்தை, சொப்பனவஸ்தை ஆகிய இரண்டும் ஒன்றே. ஏனென்றால் அவை இரண்டும் மனதின் கூறுகளாம். எந்த நிகழ்ச்சி மனிதனுடைய ஆத்மபோதத்தைத் தூண்டுகிறதோ அது ஜாக்ரதாவஸ்தையில் வரலாம் அல்லது சொப்பனவஸ்தையில் வரலாம். எந்த அவஸ்தையில் வந்தாலும் அதற்கு உரிய மதிப்பை ஆத்மசாதகன் குறைபடுத்துவதில்லை. ஸ்பரிச தீட்சையின் மூலமாக முமுட்சுவிடம் ஞான குரு ஆத்மபோதத்தை ஊட்டுகிறார். சுவாமி விவேகானந்தரிடம் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அங்ஙனம் செய்தார். தாயுமான சுவாமிகளுக்குஅவரை ஆட்கொண்ட மௌன குருவும் அங்ஙனமே செய்தார். கனவு போன்று தென்பட்ட நிகழ்ச்சி பிறகு நனவாகவும் நிறைவேறியது. அக்கோட்பாட்டை இக்கண்ணி மூலம் அவர் வெளிப்படுத்துகிறார்.

# பரபோதம்

( ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரமானந்தரின் போதனை )

துன்பத்தை யாரும் விரும்புவதில்லை. யாவரும் இன்பத்தையே விரும்புகின்றனர். இன்பம் இறைவனிடமிருந்து வருகிறது என்பதை மக்கள் அறியாது இருக்கின்றனர். இறைவன் இன்பசொருபமாக இருக்கிறார். ஆனால் உலகப் பொருள்களில் மயங்கியுள்ள மக்கள் இன்பம் பெறுவதற்கு உலகை நாடி ஓடுகின்றனர். உனக்கு இன்பம் வேண்டுமென்றால் உலகைத் துறந்துவிடு. கடவுள் நாட்டம் தீவிரமாகக் கொள். அவர் உன்னைப்பேரின்பத்திற்கு இழுத்துச் செல்வதற்காக உன்னிடம் ஓடி வருவார். உலகப்பொருளைத் தேடுவாயானால் உனக்கு அவைகள் கிடைக்கும். கடவுளைத் தேடுவாயானால் கடவுள் உனக்குக் கிடைப்பார்.

"ஒரு தோட்டத்துக்குள் இரண்டு நண்பர்கள் சென்றார்கள். ஒருவன் தோட்டத்தில் உள்ள மரங்களையும், இலைகளையும் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தான். மற்றொருவன் தோட்டக்காரனோடு சிநேகம் வைத்து நல்ல கனிகளைப் பெற்று அருந்தினான். கனிகள் அருந்தியவன் பயனடைந்தானா? இலைகளையும், மரங்களையும் எண்ணியவன் பயனடைந்தானா?" என்று ராமகிருஷ்ணர் கேட்கின்றார். கனியருந்தியவன் பயனடைந்தது போன்று கடவுளை அடைவதுதான் வாழ்வின் பயனாகும். முதலில் கடவுளை அடைய முயல்வோமாக. பிறப்பு இறப்பைக் கடந்து துன்பத்திலிருந்து மீள்வோமாக. உலக பந்தபாசத்திலிருந்து விழித்தெழுந்து அமிர்த சாகரத்தில் மூழ்கி அழியாப் பெருநிலையையடைவோமாக.

கடவுளுக்கு வடிவங்களும் நாமங்களும் கணக்கற்றவைகளாக இருக்கின்றன. வடிவங்களையெல்லாம் கடந்த அருவநிலையிலும் அவர் இருக்கின்றார். உருவக் கடவுளையோ, அருவக் கடவுளையோ வழிபாடு செய். கடவுள் தியானத்தில் உன் முழுமனதும் ஈடுபடட்டும். நீ அவரை எந்த உருவத்திலும் எந்த நாமத்தையும் சொல்லி வழிபடலாம். எல்லா வழிபாடுகளும் அவரைப் போய்ச் சேருகின்றன. உன் வழிபாடு சிறப்போடு கூடிய உண்மையான வழிபாடாக இருக்குமாயின் கடவுள் காட்சி உனக்குக் கிட்டும். "இனிப்புப் பண்டத்தை எப்பக்கம் கடித்துச் சுவைத்தாலும் அது சுவையாகத்தான் இருக்கும். அங்ஙனம் எவ்வடிவத்தை வழிபட்டாலும் அது கடவுள் வழிபாடு ஆகும்." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார்.

தெய்வநம்பிக்கை உடையவனாக இரு. சச்சிதானந்தம் என்னும் கரைகாணாத ஆனந்தக் கடலில் மூழ்கு. அதில் ஆழ்ந்து மூழ்குகின்ற அளவு அழியாப் பேரின்பத்தைப் பெறுவாய். தளர்ச்சியடையாது ஊக்கத்தோடு ஆத்மஞானம் பெறும் பொருட்டுத் தீவிர சாதனையில் ஈடுபடு. ஆத்மீக வாழ்விற்கு இணையான வேறு வாழ்வு இல்லை. ஆத்மீக வாழ்வின் பெருமை அளப்பரியது. ஆனால் அதை எளிதில் அறிந்து கொள்ள முடியாது. மனதை அடக்கி உள் முகமாகச் செலுத்தி ஆத்ம தியானத்தில் ஆழ்ந்துபோவதற்குப்பொறுமையோடு முயற்சி செய். உண்மையான முயற்சி வீண்போகாது. கடவுள் அருள்பெற்று நீ நாளடைவில் சாதனையில் வெற்றி பெறுவாய். பெரிய மனிதர் ஒருவரைப் பார்க்க அவரது முக்கியமான மனிதரின் உதவியைப் பெறவேண்டும். அங்ஙனம் கடவுளுடைய அருள் பெறுவதற்கு நல்லார்களுடைய உதவியை நாடவேண்டும்.

தாய் தந்தையர்களைவிடக் கடவுள் நெருங்கிய உறவினர் ஆவார். பெற்ற தாயை மகவு மறந்தாலும், மகவைத் தாய் மறந்தாலும் உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும் தெய்வத்தை நீ மறக்காது இருக்க வேண்டும். அவர் உனக்கு மிக நெருங்கிய உறவு ஆவார். குழந்தை தாயிடம் உரிமையோடு தான் விரும்புவதைக் கேட்பதுபோன்று இறைவனிடம் நீ உரிமையோடு அவருடைய காட்சியைப் பெறுவதற்குப் பிரார்த்தனை செய். குழந்தை போன்று கள்ளம் கபடமற்ற உள்ளத்துடன் அழுது பிரார்த்தனை செய். மனப்பூர்வமாக அவரை வேண்டுமென்று விரும்புவாயானால் அவர் உன்னிடம் வராமல் இருக்க மாட்டார்.

கப்பலில் காந்த ஊசி வடதிசையையே காட்டிக்கொண்டிருப்பது போன்று உன் மனம் ஈசு

வர சிந்தனையிலேயே இருக்கட்டும். கப்பல் எந்தத் திசைக்குச் சென்றாலும் காந்த ஊசி வட திசையை நோக்கியே இருக்கும். காந்த ஊசியின் உதவியைக்கொண்டு கப்பலின் மாலுமி திசையை அறிந்து கப்பலைச் செலுத்துவான். உன் மனம் கடவுளை நோக்கியே இருக்கும் பொழுது வாழ்க்கை என்னும் படகுக்கு ஆபத்து இல்லை. கடவுளை நம்பி இருப்பவன் எத்தகைய இன்னல்கள் வந்தாலும் கடவுளிடம் பக்தியையும் விசுவாசத்தையும் இழந்துவிட மாட்டான். கடவுள் மீது உன் மனம் பித்துக் கொண்டிருக்கட்டும். கடவுளைப்பற்றிக் கேட்ட மாத்திரத்தில் உன் மனம் பேரானந்தமடையட்டும். சக்கிமுக்கி கல் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் நீருக்குள் இருக்கலாம். நீரை விட்டு அதை வெளியே எடுத்துத் தட்டினால் உடனே அதில் நெருப்புப்பொறி உண்டாகும். சக்கிமுக்கி கல் போன்று நீ எவ்வளவு காலம் உலகில் வாழ்ந்திருந்தாலும் ஈசனைப் பற்றிக் கேட்ட மாத்திரத்தில் உன் உள்ளம் ஆனந்தக் கடலில் மூழ்கட்டும்.

காய்ந்து உதிர்ந்த சருகு காற்றடிக்கும் பக்கம் செல்லும். அது போன்று தெய்வத்தை முற்றிலும் சார்ந்துள்ள பக்தன் தெய்வத்தின் திட்டப்படி நடந்துகொள்கின்றான். கடவுள் தன்னை எந்தச் சூழ்நிலையில் வைக்கின்றாரோ அந்தச் சூழ்நிலையில் திருப்தியோடு இருக்கின்றான். சூழ்நிலையைக் குறைகூறாது எந்தச் சூழ்நிலையையும் தனக்கு அனுகூலமானதாகப் பக்தன் ஆக்கிக்கொள்கின்றான். பக்தன் தனக்கென்று ஒரு விருப்பத்தையும் வைத்துக்கொள்ளாது கடவுளுடைய விருப்பப்படி வாழ்கின்றான். அவன் இவ்வுலகத்தில் வாழ்ந்திருக்கிறான் எனினும் தன் மனதை அகண்ட சச்சிதானந்தத்தில் வைத்திருக்கின்றான்.

தூய மனது உலர்ந்த தீக்குச்சி போன்றது. உலர்ந்த தீக்குச்சியைச் சிறிது தேய்த்தவுடன் எளிதில் தீப்பற்றிக்கொள்ளும். ஆனால் ஈரக்குச்சியாக இருந்தால் நீ எவ்வளவுதான் அதைத் தேய்த்தாலும் தீ பற்றாது. தூயமனது எளிதில் ஈசுவர மகிமையில் மூழ்குகிறது. உலக ஆசை மனதில் புகுந்துவிட்டால் அதைத் தெய்வத்திடம் திருப்புவது மிகவும் கஷ்டம். மனதில் உலக ஆசை புகாது இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும்.

ஜபம், தியானம் நாள்தோறும் குறித்த நேரங்களில் செய்து வா. இஷ்ட தெய்வத்தினிடத்தில் மனதை நிலைநிறுத்துவதற்கு உன் மனதுக்குப் பயிற்சி கொடு. நீண்ட நாள் பயிற்சிக்குப் பிறகு இஷ்டதெய்வத்திடம் மனம் தானாகச் செல்வதைக் காண்பாய். சாதனையைத் தொடர்ந்து இடைவிடாது சிலஆண்டுகளுக்குச் செய்து வருவாய் ஆனால் சாதனை செய்வதில் உனக்கு மகிழ்ச்சி உண்டாகும். சாதனையில் உன் மனம் நிலைபேறுடையதாக இருக்கும். ஆரம்பத்தில் ஜபம், தியானம் பண்ணுவதற்கு உனக்கு ஊக்கம் உண்டாகாமல் இருக்கலாம். நோயாளி ஒருவன் கசப்பு மருந்தை உண்பதற்குச் சிரமப்படுவது போன்று உன் மனம் ஆரம்பநிலையில் ஜபம், தியானம் பண்ணுவதற்குச் சிரமப்படும். ஆனால் நீ அதன் போக்கில் அதைப் போக அனுமதிக்காதே. கடவுள் எண்ணத்தை வலியுறுத்தி மனதில் எழும்படி செய். நாளடைவில் கடவுள் சிந்தனை பண்ணுவதற்கு உனக்கு மகிழ்ச்சி உண்டாகும். சாதாரண உலக காரியம் ஒன்றைச் சாதிப்பதற்கு நீ எவ்வளவு சிரமம்எடுத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது! கடவுளை அடைவது சுலபமான காரியமா! மனதைத் தூய்மைப்படுத்தியவர்களுக்கு அது எளிய காரியம். மனம் தூய்மை இல்லாதவர்களுக்கு அது மிகவும் சிரமமான காரியம். கள்ளம் கபடமற்ற உள்ளத்தோடு அவரைக் கூவி அழை. அவர் உன்னிடம் வருவார்.

சாதனையின் பொழுது சோதனைகள் பல வரும். மனதுக்கு ஏமாற்றமும் ஏற்படும். சிற்சில சமயம் ஒருவித முன்னேற்றமும் உண்டாகவில்லை என்ற எண்ணம் உனக்கு ஏற்படும். மனம் சஞ்சலத்துக்குள்ளாகும். சாதனையை நிறுத்திவிடலாமா என்றும் தோன்றும். இந்த மன நிலைகளெல்லாம் சாதனைக்கு வரும் இடைஞ்சல்களாகும். நீ இத்தகைய மனநிலைகளைக் கண்டு தளர்ச்சி அடைந்து விடாதே. அவைகளையெல்லாம் மீறிச் சாதனையில் ஊக்கம் கொண்டிரு. மனதிலுள்ள கெட்ட சம்ஸ்காரங்களின் வலிவு குறைந்துவிட்டால் உன் உள்ளத்தில் கடவுள் நாட்டம் அதிகரிக்கும். அப்பொழுது சாதனை செய்வதில் ஆர்வமும் மனதில் அமைதியும் உண்டாகும்.

# என் குருநாதர்

(சுவாமி விவேகானந்தர் நியூயார்க்நகரில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[ 336ஆம் பக்கத் தொடர்ச்சி ]

புத்தரைப் பற்றியும், இயேசுநாதரைப்பற்றியும், முகமதுநபியைப் பற்றியும் நான் படித்திருக்கின்றேன். இன்னும் பழங்கால மகான்களைப்பற்றியும் நான் அறிந்திருக்கிறேன். “நீ பரிபூரணன் ஆகக்கடவாய்” என்று ஒரு மனிதரைப் பார்த்து அவர்கள் ஆசிர்வதிப்பார்களானால் அவன் பரிபூரணனாகி விடுவான். என் குருநாதரைப் பார்த்ததும் அக்கோட்பாடு முற்றிலும் உண்மை என்பதை நான் நேரில் அறிந்தேன். அவரைப் பார்த்ததும் எனக்கிருந்த ஐயங்களெல்லாம் அறவே துடைக்கப்பட்டன. “லௌகிகப் பொருளை நாம் பிறருக்குக் கொடுக்கவும் பிறர் அவற்றை ஏற்கவும் சாத்தியம். அதைவிட இன்னும்தெளிந்தநிலையில் மதத்தை பிறருக்குக் கொடுக்கவும் பிறர் அதை ஏற்கவும் முடியும்” என்று என் குருநாதர் கூறுவது வழக்கம். ஆகவே சமய வாழ்வு உடையவனாக இரு. ஆத்மஞானம் உடையவனாக இரு. நீ பெற்ற ஆத்ம ஞானத்தை உலகுக்குக் கொடு. சமயம் என்பது வெறும் வாய்ப் பேச்சன்று. வெறும் கொள்கைகளும் கோட்பாடுகளும் அடங்கியது அன்று. மதம் ஒரு கட்சியும் அன்று. கட்சிக்காரர்களிடத்திலும் சமூகக் கட்டுப்பாடு இருக்கிறவர்களிடத்திலும் சமயத்தைக் காண முடியாது. ஜீவாத்மனுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பு சமயம் ஆகும். சமுதாயத்துக்குள் அதைக் கட்டுப்படுத்த முடியாது. சமயத்துக்குள் லௌகிகம் புகுந்தால் அது வியாபார நிலைக்குக் கீழ் இறங்கிவிடும். எங்கு வியாபார நோக்கு மதத்தில் இருக்கிறதோ அங்கு மதம் அழிந்துவிட்டது எனலாம். கோயில் கட்டுவது, சர்ச்சுகள் கட்டுவது, ஆலயங்களுக்கோ, சர்ச்சுகளுக்கோ போவது ஆகிய செயல்களில்மட்டும் மதம் அடங்கியிருக்கவில்லை. புஸ்தகங்களிலோ, வார்த்தைகளிலோ, சொற்பொழிவுகளிலோ, சங்கங்களிலோ மதம் அடங்கவில்லை. மதம் என்பது அனுபூதியாகும். உண்மையை நாம் அறிகின்ற வரையிலும் நமக்குத் திருப்தி உண்டாகாது என்பது நமக்குத் தெரியும். நாம் எவ்வளவுதான் சம்வாதம் செய்தாலும், எவ்வளவுதான் கேட்டாலும் அவைகளெல்லாம் நம்மைத் திருப்திப் படுத்தா. சமய அனுபூதி ஒன்றுதான் நம்மைத் திருப்திப்படுத்தும். நம்முடைய முயற்சி நேர்மையானதாக, உண்மையானதாக இருக்குமானால் சமய அனுபூதி பெறுவது நமக்குச் சாத்தியம். சமய அனுபூதி பெறுவதற்கு முதல் நிபந்தனை தியாகம் அல்லது துறவு ஆகும். தியாகத்தை எவ்வளவுக்கெவ்வளவு நாம் செய்ய முடியுமோ அவ்வளவுக்கவ்வளவு தியாகம் செய்யவேண்டும். இருளையும், ஒளியையும் சேர்ந்தாற்போல் காண முடியாது. அங்ஙனம் உலக சுகத்தையும், கடவுள் இன்பத்தையும் சேர்ந்தாற்போல் பெறமுடியாது. கடவுளுக்கும் உலகுக்கும் சேர்ந்தாற்போல் நீ அடிமையாக இருக்க முடியாது. உலகையும், கடவுளையும் அனுபவிக்கலாம் என்று விரும்புகின்ற மக்கள் முயற்சி செய்து பார்க்கட்டும். அப்படி முயற்சி செய்தவர்கள் பலரை நான் ஒவ்வொரு நாட்டிலும் கண்டிருக்கிறேன். அவர்கள் முயற்சி இறுதியில் வீணாயிற்று. உண்மையான ஒருவார்த்தை எது என்றால் கடவுளுக்காக அனைத்தையும் தியாகம் செய் என்பதேயாகும். அது மிகவும் கஷ்டமான செயலாகும். அதைப் பயிற்சிக்குக் கொண்டுவருவதற்கு நீண்ட காலம் பிடிக்கும். ஆனால் நீங்கள் அதைச் செய்துதான் ஆகவேண்டும். இவ்வாழ்விலேயே அதைச் செய்யுங்கள். சிறிது சிறிதாகத் தியாகத்தின் உச்ச நிலையை அடைய வேண்டும்.

என்னுடைய குருநாதரிடமிருந்து நான் கற்றுக்கொண்ட மற்றொரு உண்மையானது மதங்களிடையே உள்ள சமரசம் ஆகும். உலகத்திலுள்ள மதங்களெல்லாம் முரண்பாடு உடையவைகளும் அல்ல. ஒன்றுக்கொன்று விரோதமானவைகளும் அல்ல. நித்தியமான ஒன்றை அடைவதற்குரிய பல்வேறு உபாயங்களாக மதங்கள் இருக்கின்றன. மதம் என்பது ஒன்றுதான். அது பல்வேறு அபிப்பிராயங்களும், மன நிலைகளும் கொண்ட வித வித

மான மக்களால் அனுஷ்டிக்கப்படுகிறது. என் மதம், உன் மதம், எங்கள் நாட்டு மதம், உங்கள் நாட்டு மதம் என்று மதங்கள் பல இல்லை. ஒரே மதந்தான் இருக்கிறது. அகண்ட ஒரு மதமே எல்லாக் காலத்திலும் இருக்கிறது. அவ்வொரு மதம் வெவ்வேறு நாடுகளில், வெவ்வேறு முறைகளில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஆகையால் எல்லா மதங்களுக்கும் மதிப்புத் தருவதுடன் எல்லா மதங்களையும் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். பூகோள ரீதிக்கு ஏற்பவும் இனப் பாகுபாட்டுக்கேற்பவும் மதம் மக்களிடையே வெளிப்பட்டிருக்கின்றது. தனிப்பட்ட மனிதனுடைய சக்திக்கேற்பவும் மதம் வெளிப்படுகிறது. ஒரு மனிதனிடத்துக் கர்மயோகமாக மதம் விளங்குகிறது. மற்றொரு மனிதனிடத்துப் பக்தியோகமாக மதம் விளங்குகிறது. மற்றொரு மனிதனிடத்தில் யோகமாகவும், இன்னும் சிலரிடத்தில் ஞானமாகவும் அது விளங்குகிறது. ''நீங்கள் சொல்லுகின்ற மார்க்கம் சரி இல்லை'' என்று மற்றவர்களைப் பார்த்துக் கூறுவது தவறு. பக்திமார்க்கத்தில் செல்லுகின்றவன் பிறர்க்கு நலன் புரிகின்ற கர்ம மார்க்கத்தில் செல்லுகின்றவனுடைய மார்க்கம் சரி இல்லை என்று கூறலாம். அது அவனுடைய மார்க்கத்துக்குப் புறம்பாக இருப்பதால் அது தவறு என்று கூறுகிறான். ஞான மார்க்கத்தில் செல்பவன் அன்பின் சொருபமான கடவுளைக் குறித்துப் பக்த யோகிகள் என்ன அறிந்துகொள்ள முடியும் என்று சொல்லுவானானால் அது தவறு. அவரவர் கடைப்பிடிக்கும் மார்க்கம் அவரவர்களுக்கு உகந்த மார்க்கமாகும்.

உண்மை ஒன்று, அது பலவாறாக விளங்கிக் கொண்டிருக்கிறது. உண்மையைப் பல்வேறு நிலைகளில் இருந்து பார்க்கும் பொழுது பல்வேறு காட்சிகளாகத் தென்படுகிறது. ஆகையால் நாம் ஒருவருக்கொருவர் பகைமை கொள்வதற்குப் பதிலாக எல்லாரிடமும் பேரன்போடு பழகவேண்டும். பல்வேறு விதமான இயல்புகளுடைய மக்கள் உலகத்தில் இருக்கும் வரையில் பலவிதமான மார்க்கங்கள் தேவைப்படுகின்றன. நமக்கிடையில் சகிப்புத் தன்மையைப் பெறுவதற்குப் பயிற்சி பெறவேண்டும். வேற்றுமையில் ஒற்றுமை இருப்பதை இயற்கையில் காண்கின்றோம். இயற்கையில் ஏராளமான வேற்றுமைகளைக் காண்கிறோம். அவ்வேற்றுமைகளுக்கிடையில் மாறுதலில்லாத நிலையானதொன்று அமைந்திருக்கிறது. அதே போன்று மனிதனிடத்திலும் மாறுபாடுகளுக்கிடையில் மாறுபடாத ஒன்று இருக்கிறது. அண்டத்தில் என்ன இருக்கிறதோ அதுவே பிண்டத்திலும் இருக்கிறது. விராட் புருஷனிடத்தில் நிகழ்வது மனிதனிடத்திலும் சிறு அளவில் நிகழ்கிறது. இத்தனை வேறுபாடுகளுக்கிடையில் ஒற்றுமை ஊடுருவி நிற்கிறது. அதை நாம் அறிந்தாகவேண்டும். அவ்வொற்றுமையை அறிவதுதான் இன்றைக்கு நமக்கு அத்தியாவசியமாகிறது. மற்றெல்லாக் கருத்துக்களினும் அவ்வொற்றுமைக் கருத்தே மேலானது. எல்லா மதங்களுக்கும் இருப்பிடமான நாட்டிலிருந்து நான் வந்திருக்கிறேன். எல்லா மதத்தினர்களும் என் நாட்டுக்குப் பிரசாரம் செய்ய வந்துள்ளனர். என்னுடைய இளமையிலிருந்து உலகத்திலுள்ள எல்லா மதத்தினரிடையேயும் நான் பழகி வந்திருக்கிறேன். மார்மன் சாதியினரும் இந்தியாவில் வந்து பிரசாரம் செய்திருக்கின்றனர். இந்தியா எல்லாரையும் வரவேற்றிருக்கிறது. மதப்பிரசாரத்துக்கு ஏற்ற நாடு இந்தியாதான். மற்ற எல்லா நாடுகளையும்விட இந்தியாவில்தான் சமயம் வேர் பிடிக்கின்றது. நீங்கள் இந்தியாவுக்கு வந்து அரசியலைப் போதிப்பீர்களானால் மக்களுக்கு அது புரியாது. ஆனால் நீங்கள் சமயத்தைப் பிரசாரம் செய்வீர்களானால் அது எத்தகையதாயினும் உங்களைப் பின்பற்றுவதற்கு நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான மக்கள் வந்து விடுவார்கள். நீங்கள் சமயத்தைத் தழுவுவீர்களானால் இந்திய மக்கள் உங்களை உயிருள்ள தெய்வங்களாகப் போற்றுவார்கள். அவர்கள் அங்ஙனம் செய்வதைக் குறித்து மகிழ்ச்சி அடைகின்றேன். அனைவரையும் தெய்வங்களாகப் பாவிக்க வேண்டுமென்பதைத்தான் இந்தியர்களாகிய நாங்கள் விரும்புகின்றோம்.

இந்துக்களுக்கிடையே கணக்கற்ற மதப் பிரிவுகள் இருக்கின்றன. வெளித்தோற்றத்துக்கு அவைகளெல்லாம் வெவ்வேறானவைகள் போன்று தென்படும். ஆனால் அவை

யாவும் ஒரு மதத்தின் பல்வேறு தோற்றங்கள் என்று இந்துக்கள் சொல்வார்கள். வெவ்வேறு நதிகள் வெவ்வேறு மலைகளிலிருந்து உற்பத்தியாகி நேராகவோ, வளைந்து வளைந்து ஓடியோ அவைகள் யாவும் கடலில் வந்து ஒன்று சேருகின்றன. அங்ஙனம் வெவ்வேறு மதப்பிரிவுகள் தங்கள் தங்கள் கருத்துக்களுடன் இறைவனையே சென்றடைகின்றன. இது வெறும் கொள்கையன்று. இவ்வுண்மையை உணர்ந்தாகவேண்டும். சில மக்கள் நினைப்பது போன்று இது வெறும் புகழ்ச்சி உரை அன்று. ஒவ்வொரு மதத்திலும் நல்ல அம்சங்கள் இருக்கின்றன. அவைகள் மனித இன முன்னேற்றத்துக்குரிய கருத்துக்களாகும். மற்ற மதங்கள் அலைகள் போன்று இருக்கின்றன என்றால் தங்கள் மதம் அவை யாவற்றுக்கும் பூரணமாக இருக்கிறது என்று பகர்கின்றனர். தன்னுடைய மதம் மிகப் பழமையானதாக இருப்பதால், அதுவே மிகச் சிறந்த மதம் என்று ஒருவன் கூறுகின்றான். மற்றொருவன் மிகச் சமீபத்தில் தன் மதம் ஏற்பட்டதால் அதுவே சிறந்தது என்று கூறுகின்றான். ஆனால் ஒவ்வொரு மதமும் மக்களுக்கு நலன்புரிவதில் சக்தி வாய்ந்ததாக இருக்கிறது என்று நாம் அறிய வேண்டும். ஆலயங்களிலோ, சர்ச்சுகளிலோ தென்படும் வேற்றுமைகளெல்லாம் மூடக் கொள்கைகளின் தொகுப்பாகும். யாவரையும் ஒரே கடவுள்தான் காப்பாற்றுகின்றார். எல்லாருடைய கேள்விகளுக்கும் ஒரே கடவுள் தான் பதில் அளிக்கின்றார். மக்களைப் பந்த பாசத்திலிருந்து விடுவிப்பவர்கள் நீங்களோ, நானோ, மற்றவர்களோ அல்லர். சர்வவல்லமை வாய்ந்த கடவுளே யாவர்க்கும் விடுதலை தந்து காப்பாற்றுகின்றார். அவரே அனைத்துக்கும் பொறுப்பாக இருக்கின்றார். கடவுள் நம்பிக்கை உடையவர்களாக இருந்துகொண்டு அதே சமயத்தில் ஒரு சிலருக்குமட்டும் கடவுள் மனித சமுதாயத்தைக் காப்பதற்குரிய சக்தியைக் கொடுத்திருக்கிறார் என்று நம்புகின்றனர். கடவுள் ஏன் ஒருசிலருக்கு மட்டும் அந்தச் சக்தியைக் கொடுக்கவேண்டும்? இக்கொள்கையை உடைய மதம் மதமாகுமா? சமயம் என்பது அனுபூதிக்குரியது ஒன்றாகும். வெறும் பேச்சோ, வெறும் நம்பிக்கையோ, அறியாமையில் மூழ்கி இருப்பதோ, முன்னோர்களுடைய வார்த்தைகளைக் கிளிபோன்று திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருப்பதோ மதமாகாது. (தொடரும்)

---

| | |
|---|---|
| या देवी सर्वभूतेषु बुद्धिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு புத்திருபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु शक्तिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு சக்திருபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु शान्तिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு சாந்திருபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु श्रद्धारूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு ச்ரத்தாருபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம: |
| या देवी सर्वभूतेषु दयारूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு தயாருபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம: |
| या देवी सर्वभूतेषु तुष्टिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு துஷ்டிருபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु मातृरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு மாத்ரு ருபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |

புத்தி, சக்தி, சாந்தம், சிரத்தை, தயை, திருப்தி, தாய் வடிவங்களாக எந்தத் தேவி எல்லா உயிர்களிடத்தும் உறைகின்றாளோ அவளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம், நமஸ்காரம்.

— *ஸ்ரீ தேவி மாஹாத்மியம்*

# புருஷோத்தமன்

பாலையும், அதன் வெண்மையையும் பிரிக்க முடியாதது போன்று பிரம்மத்தையும், அதன் சக்தியையும் பிரிக்கமுடியாது. அவ்யக்தநிலை அல்லது தோன்றாநிலையில் பிரம்மத்தின் சக்தி பிரம்மத்துக்கு அபின்னமாய் இருக்கிறது. தோற்றத்துக்கு வரும்பொழுது பிரம்ம சக்தி இப்பிரபஞ்சமாகப் பரிணமிக்கிறது. ஜடப் பொருள்களின் மூலம் வெளியாகும் சக்தியும், உயிர்களின் மூலம் வெளியாகும் சக்தியும் பிரம்ம சக்தியேயாகும். ஜடப்பொருள்களின் மூலம் வெளியாகும் சக்தியை ஜடசக்தி யென்றும், உயிர்களின் மூலம் வெளியாகும் சக்தியைச் சித்சக்தியென்றும் பகர்கிறோம். மனிதன் தன் மூலம் வெளியாகும் சக்தியைத் தன் சக்தி யென்று எண்ணி ஆணவ அகங்காரத்தை வளர்த்துக் கொள்கின்றான். உண்மையில் அவன் மூலம் வெளிப்படும் சக்தி பிரம்ம சக்தியேயாகும். தன் மூலம் வெளிப்படும் சக்தியும், மற்றவர்களின் மூலம் வெளிப்படும் சக்தியும் பிரம்மசக்தி என்று அறிபவன் புருஷோத்தமன் ஆகின்றான்.

உயிர்களின் தொகுப்பே பிரம்மம் ஆகிறது. அந்தத் தொகுப்பிலிருந்து தன்னைப் பிரித்துக் கொள்பவன் ஜீவன் ஆகின்றான். தன்னை அந்தத் தொகுப்போடு ஐக்கியப்படுத்துபவன் புருஷோத்தமன் ஆகின்றான். பிரிவினையைப் பெருக்கிக் கொண்டே போவது பந்தப்பட்ட வாழ்வாகும். ஐக்கியத்தை உருவாக்கி வருவது பாரமார்த்திக வாழ்வாகும். முக்குணத்துக்கு வசப்பட்ட மனிதன் எல்லாத்துறைகளிலும் பிரிவினையைப் பெருக்கவே முயலுகின்றான். தன்னை மற்ற உயிர்களிடமிருந்து பிரித்துக் கொள்வதற்கே முக்குண வசப்பட்ட மனிதன் செயல் புரிகின்றான். சமுதாயம் ஒரு பேரமைப்பாகும். அப்பேரமைப்புக்குப் பாடுபடுபவர்கள் ஐக்கியத்தை வளர்க்கின்றார்கள். அப்பேரமைப்பிலிருந்து தங்களைக் கூட்டம் கூட்டமாகப் பிரித்துக் கொள்பவர்கள் பிரிவினையை வளர்ப்பவர்களாகிறார்கள். கல்வி கற்பவர்களை மாணாக்கர்கள் என்றும், கல்வி கற்பிப்பவர்களை ஆசிரியர்கள் என்றும் அழைக்கிறோம். பெயர்கள் மாறுவதை முன்னிட்டு மாணவர்கள் தனிக் கூட்டத்தினர், ஆசிரியர்கள் தனிக் கூட்டத்தினர் அல்லர். சமுதாய அமைப்பில் அவ்விரு கூட்டத்தினரும் ஒன்றுபட்டவராகின்றனர். சமுதாய அமைப்பில் மாணவர்களுக்கான கடமையும் உண்டு; ஆசிரியர்களுக்கான கடமையும் உண்டு. இளம் செடியானது காற்றிலிருந்தும், நீரிலிருந்தும், மண்ணிலிருந்தும் தனக்குத் தேவையானதைப் பெற்று நன்கு வளரவேண்டும். மரமான பிறகு மற்றவர்களுக்குப் பயன்படுகின்ற முறையில் நல்ல விளைவைத் தரவேண்டும். மாணவர்கள் இளம் செடிக்கு நிகராகின்றனர். அவர்கள் சமுதாயத்திலிருந்து தங்களுக்கு வேண்டியதைப் பெறுவதில் கண்ணும் கருத்துமாக இருந்து தங்கள் உடலையும் அறிவையும் வளர்க்கவேண்டும். ஆசிரியர்கள் மரத்துக்கு நிகராகின்றனர். அவர்கள் சமுதாயத்துக்கு நல்லறிவை வழங்குவதில் நன்கு பயன்படவேண்டும். இவ்வுண்மைக்கொப்ப வாழும் மாணவர்களும், ஆசிரியர்களும் சமுதாயம் என்னும் பேரமைப்புக்குப் பாடுபடுபவர்களாகிறார்கள். இவ்வுண்மையை மறந்துவிட்டு, மாணவர் சங்கம் என்றும், ஆசிரியர் சங்கம் என்றும் அமைத்துக்கொண்டு கடமையைச் செய்யாது உரிமை வேண்டுமென்று போராடுபவர்கள் பிரிவினையை வளர்ப்பவர்களாகிறார்கள். இங்ஙனமே ஆட்சித்துறையிலுள்ளவர்கள், விவசாயிகள், வியாபாரிகள், தொழிலாளிகள், இன்னும் இவைபோன்ற மற்ற துறைகளிலுள்ளவர்கள் அனைவரும் சமுதாய அமைப்புக்கு நன்கு பயன்படவேண்டும். தாங்கள் சமுதாய அமைப்பிலுள்ளவர்களென்பதை மறந்துவிட்டுத் தங்களைத் தனித்தனி குழுக்களாகப் பிரித்துக் கொண்டு போராட்டத்தை உண்டுபண்ணுபவர்கள் பிரிவினையை வளர்ப்பவர்களாகிறார்கள். தங்களைச் சமுதாயத்தோடு ஐக்கியப்படுத்தி செயல்புரிபவர்கள் ஞானத்தை வளர்க்கிறார்கள். சமுதாயத்திலிருந்து பிரித்துக்கொள்ளும் வகையில் செயல் புரிபவர்கள் பிரகிருதி வசப்பட்டு அஞ்ஞானத்தை வளர்ப்பவர்களாகிறார்கள்.

மனிதன் உணர்வு சொருபமாக விருக்கின்

ஞன். உணர்வு உடலைப் பற்றியதாகவிருக்கும் பொழுது அவன் ஜீவாத்மனுகவிருந்துகொண்டு வேற்றுமையை வளர்க்கின்ருன். மனிதன் எப் பொழுது உடல் உணர்வைக் கடக்கின்ருனே அப்பொழுது அவன் புருஷோத்தமனுகின்ருன். உலகப்பற்று அறவே ஒழிந்து பரம்பொருளை ஆவலோடு தேடுகின்ற நிலை பேருணர்வு ஓங் கப்பெற்ற நிலையாகிறது. மனத்தகத்துள்ள மாசுகளெல்லாம் அறவே நீங்கப்பெறுகிற பொழுது அப்பெருநிலையை யடைவது சாத் தியமாகிறது. உடல் உணர்வில் கட்டுண்டு கிடக்கின்ற ஜீவாத்மன் பால் உணர்ச்சி உடைய வனுகவிருக்கின்ருன். ஆண்பாலர்கள் பெண் பாலர்களிடம் காமுறுவதும், பெண்பாலர்கள் ஆண்பாலர்களிடம் காமுறுவதும் சிற்றுணர்வு படைத்துள்ள ஜீவாத்மாக்களின் இயல்பாகும். புறத்தில் தென்படுகின்ற சரீரங்கள் ஊனக் கண்ணுக்குத் தென்படும் காட்சியாகும். அச் சரீரங்களில் இலங்கும் ஆத்மாவைக் காண்பது ஞானக்கண் பெற்றவர்களுக்குச் சாத்திய மாகிறது. மனம் தூய்மை அடையும்பொழுது அகக்கண் அல்லது ஞானக்கண் திறக்கிறது. அப்பொழுது புறத்தில் தென்படும் சரீரங்கள் மறைந்து அவைகளின் ஊடே இலங்கும் ஆத்மா காட்சிக்குரியதாகிறது. ஞானக்கண் படைத் தவன் மெய்க்காட்சி காண்கின்ருன். ஊனக் கண்காட்சி எல்லார்க்கும் கிடைக்கிறது. ஞானக்கண் காட்சியைப் பெறுவதுதான் வாழ்க்கையின் உயர்ந்த லட்சியம் ஆகிறது. கணவன், மனைவி, புத்திரர்கள், மித்திரர்கள் என்கின்ற பேதங்களை ஒழித்து யாவரையும் தெய்வமாகக் காணும் காட்சியே மெய்க்காட்சி யாகும். புருஷோத்தமன் மெய்க்காட்சியுடைய வனுகவிருக்கின்ருன்.

அறியாமையினுல் இயற்கையில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளுக்கு ஜீவன் தன்னைக் கட்டுப்படுத் திக்கொள்கின்ருன். சிந்தித்துப்பார்த்தால் கட் டுப்பாடுகளை ஜீவன் தனக்குத்தானே உண்டு பண்ணிக்கொண்டு துன்பப்படுவது விளங்கும். ஜீவனுக்கு இப்பொழுது கிடைத்துள்ள சரீரம் சாசுவதமானதன்று. இந்தச் சரீரத்தை எடுப் பதற்கு முன்பு ஜீவனுக்கு இந்தச் சரீரத்தோடு எந்தவிதத் தொடர்வும் இல்லை. இனி, எப் பொழுது வேண்டுமானுலும் இந்தச் சரீரம் மறைந்து போகும். இதற்கிடையில் தான் பெற்றிருக்கும் சரீரத்தில் ஜீவனுக்கிருக்கும் பற்றுத்தான் என்னே! சரீரத்தில் ஜீவன் கட்டுண்டவனுகக் கிடக்கின்ருன். தாய் தந்தை யர்கள், பெண்டுபிள்ளைகள், உற்ருர் உறவி னர்கள் யாவரும் ஜீவனுக்குத் தாற்காலிக மாக அமைந்தவர்களாகிருர்கள். இவர்கள்மீது ஜீவன் வைத்திருக்கும் பாசம்தான் என்னே! இவர்கள்மூலம் தான் இன்பமடைவதாகக் கற் பனை பண்ணிக்கொண்டிருக்கும் ஜீவனின் அறியாமைதான் என்னே! வாழ்வை நடத்து வதற்கு ஓர் ஊர் ஜீவனுக்கு அமைகிறது. அந்த ஊரைச் சொந்த ஊர் எனக் கருதி அதில் ஜீவன் கட்டுண்டு கிடக்கின்ருன். காலம் சரீ ரத்தைத் தேய்த்துக்கொண்டிருக்கிறது. கால மானது சரீரத்தை விழுங்கிவிடுகிறது. சரீரம் காலத்துக்குக் கட்டுண்டதாகவிருக்கிறது. சரீர மயமாகத் தன்னை எண்ணியிருக்கும் ஜீவன் காலத்தில் கட்டுண்டவனுகவிருக்கின்ருன். இங் ஙனம் பிரகிருதி தத்துவத்தில் ஜீவன் கட் டுண்டவனுகவிருக்கின்ருன். புருஷோத்தமன் தன்னை இப்பந்தபாசத்திலிருந்து விடுவித்துக் கொண்டு பரதத்துவத்தில் மனதை நிலைநாட்டி யிருக்கின்ருன். காலதேச வர்த்தமானத்தைக் கடந்து அதீதத்தில் பரமானந்தமாக இருப்பது புருஷோத்தமனுடைய இயல்பாகும்.

கடலில் கலந்த நதி கடல்மயமாவதுபோன்று பரத்தில்கலக்கும் ஜீவன் பரமயமாகிவிடுகின் ருன். ஜீவனைப் பரத்தில் கலக்கவொட்டாது மனம் தடை செய்துகொண்டிருக்கிறது. மன தின் இயல்புகள் மனதை உலகத்தின்பால் இழுக்க மனம் ஜீவனது அறிவை இந்த்ரிய சுகத்தின்பால் இழுக்கிறது. ஒரு குளத்தின் நடுவில் தாமரை மலர் பூத்திருந்தது. அக் குளத்தில் ஆம்பல் கொடிகளும், அல்லிக்கொடி களும் நிறைந்திருந்தன. இருவர் கைகளில் கத்திகளைக்கொடுத்து அத்தாமரை மலரைக் கொய்துவரச் சொன்னுர்கள். ஒருவன் குளத் துக்குள் இறங்கியதும் அவன் கால்களைக் கொடிகள் பின்னிக்கொண்டன. அக்கொடி களின் பிணிப்பிலிருந்து விடுபடமுடியாதவனு கத் துன்பத்துக்காளானுன். மற்ருெருவன் குளத்தில் இறங்கினவுடன் கொடிகள் அவன் கால்களையும் சுற்றின. அவன் தன் கையில்

இருக்கும் கத்தியால் கால்களைப் பின்னிய கொடிகளையெல்லாம் அறுத்துத் தள்ளிக் கொண்டே போய்த் தாமரை மலரையும் கொய்துகொண்டு வந்துவிட்டான். முதலா மவன் கையிலிருந்த கத்தியைப் பயன்படுத்தாத தால் அவன் கொடிகளுக்கிடையில் அகப்பட் டுக்கொண்டான். இரண்டாமவன் கத்தியைப் பயன்படுத்தியதால் மலரைப் பெற முடிந்தது. முதலாமவன்போன்று தங்கள் விவேகத்தைப் பயன்படுத்தத் தெரியாதவர்கள் உலக பந்த பாசத்தில் அழுந்தித் துன்பப்படுகிறார்கள். விவேகத்தை நன்கு பயன்படுத்துபவர்கள், பந்தபாசங்களையெல்லாம் அறுத்துத் தள்ளி விட்டுத் தங்கள் மனதைப் பரத்தின்பால் லய மாக்குகின்றார்கள். அவர்கள் புருஷோத்தமர் களாகிறார்கள். மனம் பரத்தில் லயமாகும் பொழுது பிரக்ஞை திரண்டதாகவும், தெளி வாகவும் ஆகிறது. பிரக்ஞை தெளிவடைந் தால் அது அகண்டாகாரமாய்விடுகிறது. பிறகு அதன்கண் போக்குவரத்து இல்லை; பிறப்பு இறப்பு இல்லை. காலதேச வர்த்தமானம் எல் லாம் அதனுள் ஒடுங்கிவிடுகின்றன.

பிரகிருதியின் சேர்க்கையால் ஜீவனுக்கு இந்த்ரியங்கள் உண்டாகின்றன. இந்த்ரியங் களின் கவர்ச்சிக்கு வசப்படுகின்ற ஜீவன் தன்னைக் கர்த்தாவாகவும், போக்தாவாகவும் எண்ணிக்கொள்கின்றான். அப்பொழுது ஜீவன் அகங்காரத்துக்கும், இந்த்ரிய சுகத்துக்கும் அடிமையாகின்றான். அகங்காரத்தினால் ஜீவன் உபாதிகளைப் பெருக்கிக்கொண்டே போகின் றான். அவ்வுபாதிகள் ஜீவனுடைய உண்மை சொரூபமான சச்சிதானந்தத்தை மறைக்கின் றன. தான் சச்சிதானந்தம் என்பதைமறக்கின்ற ஜீவன் போலிசுகத்தில் மயங்கிவிடுகின்றான். இந்த்ரிய சுகம் போலி சுகம். அப்போலி சுகத் துக்கு ஜீவன் எளிதில் வசமாகிவிடுகின்றான். ஏனென்றால் அவன் சச்சிதானந்தமாகிய நிஜ சொரூபத்தை மறந்துவிட்டான். தான் சச்சி தானந்தம் என்பதை ஞாபகத்துக்குக் கொண்டு வருபவன் புருஷோத்தமனாகின்றான்.

புருஷோத்தமன் உலக வாழ்விலிருந்து விடு படுவதற்கு உலக வாழ்வைப் பயன்படுத்துகின் றான். உலக வாழ்வை அவன் நன்கு வாழ் வதன்மூலம் மனதை நசித்துப்போகும்படி செய்துவிடுகின்றான். மனோநாசம் செய்து பிறப்பு இறப்பைக் கடந்து பரத்தோடுலயமாவ தற்காகப் புருஷோத்தமன் உலக வாழ்வைப் பயன்படுத்துகின்றான். ஆனால் ஜீவனோ உலக வாழ்வின்மூலம் மனதையும், இந்த்ரியங்களையும் கட்டிலடங்காததாகச் செய்து விடுகின்றான். ஜீவனுக்கு ஆணிவேர் போன்று ஈசுவரன் இருக்கின்றார். அவனுடைய கர்மங்கள் சல்லி வேர்களுக்கு நிகராகின்றன. சல்லிவேர்களா கிய கர்மங்களைச் செப்பனிடும் பொழுது ஜீவன் திருந்தியமைகின்றான். கெட்ட இயல்பைத் திருத்தியமைப்பதற்கு நல்லியல்பை வளர்க்க வேண்டும். நல்லியல்பை வளர்ப்பதற்கு நல்ல எண்ணங்களும், நல்ல கர்மங்களும் பயன்படு கின்றன. நல்லியல்பு ஜீவனைச் சத்கர்மத்தில் ஈடுபடுத்துகின்றது. நல்வினையின் பயனையும் துறந்துவிடுதல் புருஷோத்தமன் செயல் ஆகிறது.

ஜீவனுக்கு விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மூன்று நிலைகள் உண்டு. விழிப்பு நிலையில் ஜீவன் தன்னைப் பிரகிருதி சொரூபமாகக் கருதிக் கொள்கிறான். பிரகிருதிக்கு வசப்பட்டு பிரகிருதியினால் ஆட்சி செலுத்தப்படுகிறான். பிரகிருதியை ஒதுக்கி வைக்க அவனால் முடிய வில்லை. கனவு நிலையில் ஜீவன் தன்னுடைய சூட்சும ஆசைகளுக்கு வசப்பட்டவனாக நடந்து கொள்கின்றான். சூட்சும ஆசைகளை வென்று அவற்றிலிருந்து விலகியிருக்க அவனால் முடிவ தில்லை. உறக்கத்தில் தமோகுணம் வசப் பட்டு அனைத்தையும் மறந்து ஜடம் போன்று கிடக்கின்றான். அந்த அறியாமை இருளில் இருந்து விழிப்படைவதற்கு ஏற்ற உணர்வு ஓங்கப் பெறாதவனாக இருக்கின்றான். மூன்று நிலைகளுக்கும் பொதுவாக உள்ள துரிய நிலை யில் இருப்பவன் புருஷோத்தமன். அந்தத் துரிய நிலை பேரானந்தப் பெருநிலையாகும்.

கர்மம் எது? அகர்மம் எது? பிரகிருதி சொரூபம் எது? ஆத்ம சொரூபம் எது? என்பதைஉள்ளபடி தெளிவுபட அறிகின்றவன் மேதாவி அல்லது பேரறிஞன் எனப்படுகின் றான். அத்தகையவனுக்குக்கர்மமும் அகர்மமும் நன்கு விளங்குகின்றன. ஆத்மசொரூபம் அகர்ம நிலையில் நிலைக்கண்ணாடி போன்ற தாக இருக்கிறது. பிம்பங்களைக் காட்டும்

பொழுதும், காட்டாது இருக்கும் பொழுதும் நிலைக்கண்ணாடி தன் மயமாக இருக்கிறது. அங்ஙனம் கர்மம் நிகழும்பொழுதும் நிகழாத பொழுதும் ஆத்ம சைதன்யம் தன்மயமாக இருக்கிறது. அழகான வடிவம் கண்ணாடிக்கு எதிரில் வந்தால் அதை முன்னிட்டுக் கண்ணாடிக்குப் பெருமை ஒன்றும் இல்லை. கோணலானதும், அழுக்குப் படிந்ததுமான வடிவம் கண்ணாடிக்கு எதிரில் வந்தால் அதை முன்னிட்டுக் கண்ணாடிக்குக் குறைஒன்றும் இல்லை. பொருள்களை உள்ளபடி பிரதிபலிப்பதற்கிடையில் கண்ணாடி யாண்டும் தன்மயமாக இருக்கிறது. பிரகிருதியில் நிகழும் செயல்களுக்கெல்லாம் ஆத்மசைதன்யம் சாட்சி மயமாக இருக்கிறது. அச்செயல்களால் ஆத்மசைதன்யம் சிறிதும் பாதிக்கப்படுவதில்லை. வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்த பேரறிஞர்கள் தங்களுக்கு ஏற்பட்ட ஸ்வதர்மத்தை முறையாகச் செய்கின்றார்கள். அப்படிச் செய்கின்ற பொழுது அவர்கள் நடுநிலையிலிருந்து சிறிதும் பிறழ்வதில்லை. மனதை நடுநிலையில்வைத்துப் புகழ்ச்சி, இகழ்ச்சிக்கு வசப்படாது கர்மத்தைக் கர்மத்துக்காகவே செய்வது புருஷோத்தமர்களுடைய இயல்பாகும். வினைகளின் மூலம் அவர்கள் இன்பத்தையோ, துன்பத்தையோ அனுபவிப்பதில்லை. கர்மத்தை விட்டுவிடாது கர்மத்தைப் பற்றற்றுச் செய்வது அவர்களுக்குச் சாத்தியம்.

இயற்கை என்பது இறைவனுடைய தோற்றம். தோற்றமாகத் தென்படுவது மறைந்து போகும். தோற்றத்துக்கு எது காரணமோ, அது மறைவதில்லை. பரம்பொருள் தம்மைஇத்தனை பொருள்களாக விளக்கிக் கொண்டிருப்பதற்கிடையில் இவற்றிற்கெல்லாம் அப்பால் இருக்கிறார். கடலினிடத்து, அலைகளாகத் தென்படும் மேற்பகுதியும் அலைகளற்ற அமைதியான ஆழ்பகுதியும் உண்டு. பரம்பொருள் அசைவோடு கூடிய இப்பிரபஞ்சமாகவும்,அசைவற்ற நிறை பொருளாகவும் இருக்கின்றார். மயக்கம் உடையவர்கள் அவருடைய அசைகின்ற பகுதியாகிய இப்பிரபஞ்சத்தை மட்டும் காண்கின்றனர். மயக்கம் ஒழிந்தவர்கள்தாம் அசையா நிலையிலுள்ள பிரம்மஞானத்தைப் பெறுகின்றனர். அத்தகைய கடவுள் காட்சி பெற்றவர்கள் வாழ்வு தெய்வ வழிபாடே வடிவெடுத்ததாகிறது. பரத்தை அறிகின்ற பொழுதுதான் செயலுக்கு முடிவு வருகிறது. பிரம்மஞானத்தைப் பெற்றவனுக்குக் கடமைகள் முற்றுப் பெறுகின்றன. பிரம்மஞானத்தைப் பெற்ற பிறகு மேற்கொண்டு பெறவேண்டியது ஒன்றும் இல்லை. பரத்தை அறிவதே மேலான ஞானம் ஆகிறது. பரத்தை அறிபவன் பரமயம் ஆகிவிடுகின்றான். இப்பிரபஞ்சத்தில் எத்தகைய செல்வாக்கைப் பெற்றாலும், புகழ், கீர்த்திகளைப் பெற்றாலும் குறைநிலை இருந்து கொண்டே இருக்கும். குறைநிலை இருக்கும் பரியந்தம் விருப்பு,வெறுப்புகள் உள்ளத்தில்இடம் பெற்றிருக்கும். விருப்பு, வெறுப்புகட்கு வசப்பட்டு வினை செய்பவர்கள் வினையைப் பெருக்குபவர்கள் ஆகின்றார்கள். வினை உள்ளளவும் பிறப்பு இறப்பு உண்டு. பிரம்ம ஞானம் ஒன்றே நிறை நிலையைத் தருகிறது. பிரம்ம ஞானத்தைத் தவிர வேறு எதுவும் நிறை நிலையை உண்டாக்குவதில்லை. எனவே மானுடன் இவ்வுலகில் பெறும் பேறுகளெல்லாம் அவனுக்கு நிரந்தர இன்பத்தைத் தருவதில்லை. பிரம்மஞானம் ஒன்றே நிரந்தர இன்பமாகிறது. முக்தி அல்லது விடுதலை பிரம்ம ஞானத்தில் தான் இருக்கிறது. ஆசையைப் பெருக்கி அல்லலை வளர்த்து பந்தபாசத்தில் மேலும் கட்டுப்படுத்துவது எதுவோ அதை மனிதன் நாடக்கூடாது. பிரம்மஞானம் ஒன்றைத் தவிர மற்ற உலகக் கீர்த்திகளெல்லாம் அத்தகைய இயல்புடையவை. மனதை அவைகளிலிருந்தும் பிரித்தெடுத்துப் பிரம்மத்தில் நிலை நிறுத்திப் பிரம்மத்தோடு ஐக்கியமடைபவன் முக்தி நிலையில் பேரானந்தம் உடையவனாக இருக்கின்றான். "பெறுதற்கரிய இம்மானுடப் பிறவியைப் பெற்றவன் இப்பிறவியிலேயே பிரம்ம ஞானம் அடையாமல் போவானாகில் அவன் வீணில் பிறந்தவன் ஆவான்" என்பது ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உபதேசம். 'அரிது, அரிது மானுடராய்ப்பிறத்தல் அரிது' என்பது கோட்பாடு. மானுடப் பிறவி ஒன்றில்தான் பிரம்மஞானம் பெறுவது சாத்தியமாகிறது. இம்மானுடப் பிறவியைப் பயன்படுத்தி இப் பிறவியிலேயே பிரம்ம ஞானம் பெறுவது நாம் பெறப்போகும் அரிய பேறு ஆகும்.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-110

655. योग्या யோக்யா —யோகத்துக்குத் தகுதியுடையள் என்பது இதன் கருத்து.

உலகப்பற்றுடையவர்கள் போகத்துக்குத் தகுதி உடையவர்களாகிறார்கள். யோகத்துக்குத் தகுதி இன்னும் அவர்களுக்கு அமையவில்லை. பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் பிரபஞ்ச சுகங்களை அனுபவிப்பது போகம். இந்திரியங்கள் மூலமாக அனுபவிக்கப்படுகின்ற சுகங்கள் துக்கங்களாக முடிவுறுகின்றன. ஆதலால் அவைகள் சிற்றின்பங்கள் என்று சொல்லப்படுகின்றன. மக்கள் எல்லாரும் பொதுவாகச் சிற்றின்பப் பற்று உடையவர்களாகவே இருக்கின்றார்கள். ஆதலால் அவர்கள் போகிகள் என்று பகரப்பெறுகிறார்கள். எத்தனை எத்தனையோ பிறவிகளில் ஜீவாத்மாக்கள் போகங்களை அனுபவித்துப் பார்த்தான பிறகு அவைகளில் சலிப்புத்தட்டுகிறது. பிறகு இந்திரிய சுகங்களில் தீவிர வைராக்யம் வருகிறது. சுகபோகத்துக்குரிய பொருள்கள் எவ்வளவுதான் ஒருவன் கைவசத்துக்கு வந்து வாய்த்தாலும் அவன் அவைகளில் நாட்டம் வைப்பதில்லை.

'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின் எழுமையும் ஏமாப் புடைத்து' என்னும் கோட்பாடே வடிவெடுத்தவனாகிறான். அப்பொழுது அவன் யோகத்துக்குத் தகுதி உடையவனாகிறான். அன்னவனுக்கு முன்மாதிரியாக அன்னை பராசக்தி இலங்குகின்றாள். ஆகையால் அவள் யோக்யா என்னும் பெயர் பெற்றுள்ளாள். யார் ஒருவன் பஞ்சேந்திரியங்களை அறவே அவித்து ஒழித்து விடுகின்றானோ அவன் யோகத்துக்குத் தகுதியுடையவனாகின்றான். சுகத்தைத் தருகிற இந்திரியங்கள் படிப்படியாக மனிதனுடைய சொரூபத்தைத் தேய்க்கின்றன. உடலுக்கு விரைவில் விருத்தாப்பியம் வருகிறது. உள்ளத்தில் அறிவு வளர்ச்சி தடைப்படுகிறது.

மேலான தத்துவங்களைக் கிரஹிக்கிற அறிவுத் திறன் போகிக்கு வருவதில்லை. ஆனால் இந்திரியங்களை அறவே கட்டியாளுகின்றவனுடைய பாங்கு உடலின் மூலமாகவும் வெளியாகின்றது; உள்ளத்தின் மூலமாகவும் வெளியாகின்றது. பிராரப்த கர்மத்தின் மூலமாக வந்து அமைகிற நோய்களைச் சமாளிக்கும் தகுதி உடலுக்கு வந்தமைகிறது. நெடுநாளைக்கு இளமையின் எழிலை அது உடைத்திருக்கிறது. இந்திரியங்களைக் கட்டி ஆளுவதின் வாயிலாக மேதை என்னும் யோக நாடியை மனிதன் அடையப்பெறுகின்றான். அதை அடையப் பெற்றவனுக்கே பரதத்துவத்துக்குள்ள நுட்பங்கள் உள்ளபடி விளங்குகின்றன. அப்ரமத்தஸ்ததாபவதி என்பது உபநிஷத் வாக்கியம். யோகத்தில் நிலைபெற்றிருப்பவனுக்கு மதிமயக்கம் உண்டாவதில்லை. தான் உடல் சொரூபம் அல்லன்; ஆத்ம சொரூபம் என்னும் உண்மை அவனுக்கு உள்ளபடி விளங்குகிறது. யோகத்தில் நிலைபெற்றிருப்பவனே பிரம்மஞானத்துக்குத் தகுதிபடைத்தவனாகின்றான்.

அகிலாண்ட சொரூபமாக அன்னை பராசக்தி இலங்குகின்றாள். அத்தகைய அன்னை யாண்டும் தன்னுடைய நிறைநிலை பிசகாதவளாக இருக்கிறாள். ஆதலால் அவள் சர்வகாலமும் சிவசொரூபத்தோடு யோகம் பூணுகிற தகுதி வாய்ந்தவளாக இருக்கிறாள். மாது ஒரு பாகம் ஆனவன் என சிவனார் போற்றப் பெறுகிறார். அது அர்த்தநாரீசுவர தத்துவத்துக்கு விளக்கமாகிறது. சிவ சொரூபத்தின் செம்பாதியாக இருக்கும் சக்திதேவியானவள் யாண்டும் நிறை நிலையில் இருப்பதால் அவள் யோக்யா என்னும் நாமம் பூண்டுள்ளாள்.

இனி அம்பிகையின் பெருமையை உலக நிலையில் வைத்து ஆராய்ந்து பார்ப்போம். யோக்யதை என்னும் சொல் தகுதி எனப் பொருள்படுகிறது. நெறியான உலக வாழ்க்கைக்குத் தகுதி உடையவன் யோக்யன் என்று பாராட்டப் பெறுகிறான். ஒவ்வொரு படித்தரத்திலும் நெறி பிரண்டு போகின்றவன் அயோக்கியன் என்று புறக்கணிக்கப்படுகின்றான். அன்னவன் சமுதாய வாழ்க்கைக்குத் தகுதியற்றவன். சமுதாய வாழ்க்கைக்குரிய நிறை நிலையை அடையப் பெறுவது வாழ்க்கையின் குறிக்கோள். அப்பெருநிலையை அடைய விரும்புகிறவனுக்கு அன்னை பரா

சக்தி முன் மாதிரியாக இலங்குகின்றாள். அத்தகைய அன்னைக்குக் கோல் வளையாள் என்பது ஒரு பெயர். ஆட்சிக்கு அறிகுறியாக அவள் செங்கோல் தாங்கி இருக்கின்றாள். அத்தகைய கோல் ஆனது நெறியினின்று ஒரு பொழுதும் வளைந்து போவதில்லை. ஆதலால் அவள் கோல் வளையாள் எனப் பாராட்டப் பெறுகிறாள். நல் வினைக்கு நலனையும், தீவினைக்குக் கேட்டையும் வழங்குவது அவளுடைய ஆட்சி முறையாகிறது. வினைப்பயன் இம்மியளவாவது பிசகாது இயற்கையின்கண் தென்படுவதே அவளுடைய ஆட்சித்திறனுக்கு எடுத்துக்காட்டு ஆகிறது. மனிதன் அமைத்து வைத்துள்ள சட்டதிட்டங்களினின்று மறைமுகமாகப் பிசகி மனிதனை ஏமாற்றிவிடலாம். அம்பிகை அமைத்து வைத்துள்ள சட்டதிட்டங்கள் சொருபமாகவே அவள் இலங்குகின்றாள். இயற்கையின்கண் அமைந்துள்ள நியதிகளினின்று யாருமே பிசக முடியாது. பிசகுகின்றவன் அதற்கேற்ற வினைப்பயனுக்கு ஆளாகின்றான். சிறிய சான்று எடுத்துக்கொள்வோம். ஓர் இடத்துக்குக் காவல் இருக்கும்படி மானுடன் ஒருவன் நியமிக்கப் பெறுகிறான். அதன்படி காவலிருந்து வருகிற மனிதன் சில மணிக்கணக்காக அக்கடமையினின்று பிசகியபின் தான் பிசகவில்லை என்று சொல்லி மனிதனை ஏமாற்றிவிடலாம். ஆனால் அதே மனிதனுடைய உள்ளத்தில் மனச் சாட்சியாக அம்பிகை வீற்றிருக்கிறாள். அந்த மனச்சாட்சியை யாரும் ஏமாற்ற முடியாது. அதே விதத்தில் அகிலாண்டங்களினுடைய நடைமுறைகளுக்கும் அவள் சாட்சியாக இருந்து அவைகளை நன்கு நிர்வகித்து வருகின்றாள். ஆதலால் யோக்யா என்னும் நாமம் அவளுக்குப் பொருத்தமாக அமைந்திருக்கிறது.

யோகம் பல வடிவெடுத்திருக்கிறது. ஒவ்வொரு வடிவமயமாகவும் அம்பிகை இருப்பதால் அவள் யோக்யா என்னும் நாமம் படைத்தவளாக இருக்கிறாள். அது எப்படி என்று ஆராய்வோம். யோகங்களுள் மந்த்ரயோகம் என்பது ஒன்று. மந்த்ரத்தின் வாயிலாக ஜீவாத்மன் பரமாத்மாவை அடைவது மந்த்ர யோகம். மனதை எது உறுதிப்படுத்துகிறதோ அது மந்த்ரம். தெய்வத்தின் நாமங்களுள் சில மந்த்ர சொருபமாக இருக்கின்றன. அவைகளுள் ஒன்றைச் சான்றாக எடுத்துக்கொள்ளுவோம். சிவ என்னும் நாமம் பரமனுக்குரிய பெயராகவும் மந்த்ரமாகவும் அமைந்திருக்கிறது. அந்த மந்த்ர உச்சாரணை பரவஸ்துவை அடைவதற்கு உற்ற உபாயமாகிறது.

சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவ சிவ என்றிடத் தீவினைமாளும்
சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவ சிவ என்னச் சிவகதி தானே.

சர்வ காலமும் இந்த மந்த்ரத்தை உச்சரித்து சிவ சொருபமாயுள்ள மந்த்ர யோகிகள் இருக்கிறார்கள். அவர்களை அப்பெரு நிலைக்கு எடுத்துச் செல்லுவதால் அம்பிகை யோக்யா என்னும் பெயர் பெற்றுள்ளாள். லயயோகம் என்பது ஒன்று. மனதை லயப்படுத்துவது லய யோகம் ஆகிறது. மனிதனுடைய மனது விருத்தி மயமாய் இருக்கிறது. அந்தந்த மனதுக்குரிய விருத்திகளே அந்தந்த மனதின் பாங்குகளை விளக்குவனவாகின்றன. விருத்திகளுள் அகண்டாகார விருத்தி என்பது ஒன்று. அதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்ளுவோம். எல்லையில் அடங்கியது அலை. அலையைக் கடல் மயமாக விரியச் செய்தால் அந்த அலை லயமாகிறது. அதே விதத்தில் மனது அகண்டாகாரமாக விரிவடையுமானால் அது மனது என்னும் பெயரை இழந்து அதற்கு ஆதாரமாக இருக்கும் பெரிய பொருளில் ஒன்றுபடுகிறது. அதற்குற்ற யோகம் லய யோகம் என்னும் பெயர் பெறுகிறது. அதன் மூலம் மனது தன்னுடைய சிற்றியல்பை ஒழித்து விட்டுப் பரம்பொருளில்பேரியல்பு மயமாகிறது. ஹடயோகம் என்பது மற்றொன்று. இந்த யோகத்தின் வாயிலாக மனிதன் காய சித்தி பெறலாம். உடலின்கண் உள்ள குறை நிலைகளை அகற்றி நிறை நிலையில் அதை நிலைத்திருக்கச் செய்தல் ஹடயோகம் ஆகிறது. அம்பிகை யாண்டும் ஹடயோக மயமாக இருக்கிறாள். அகிலாண்டங்கள் ஒன்றுகூடி அவளுக்குரிய மேனி ஆகின்றன. அகிலாண்டங்களைத் தொகுத்து ஆராய்ந்து பார்க்குமிடத்து அவைகளினுடைய தொகை யாண்டும் நிறைவில் நிலை பெற்றிருக்கிறது. ஆதலால் அம்பிகை யாண்டும் ஹடயோக மயமாக இருக்கின்ற

யோக்யா ஆகிருள். அவளுடைய ஹடயோக் யதையை உபாசனை பண்ணுகின்றவன் ஹட யோகத்துக்குத் தகுதி உடையவனுகின்ருன். இந்தயோகங்களுக்கெல்லாம்மேலாக அமைந்தி ருப்பது ராஜயோகம். இது அஷ்டாங்க யோகம் எனவும் பெயர் பெறுகிறது. எட்டு அங்கங் கள் இதனிடத்து இருப்பதால் இது அப்பெயர் பெற்றுள்ளது. இதை இயற்றியவர் பதஞ்சலி முனிவர். தியானமும், சமாதியும் இதனுடைய ஏழாவது எட்டாவது அங்கங்களாகின்றன. யோகி ஒருவனுக்கு முறையாகத் தியானம் கைகூடுமானல் அது சமாதியாகப் பூர்த்தியா கிறது. பண்பட்ட மனது பரமாத்ம சொருப மாக அதில் ஒன்றுபடுகிறது. கடலை எட்டுகிற நதி தானே கடலாவதுபோன்று சமாதி வாய்க் கப்பெற்ற யோகி பரத்தில் ஒன்றுபடுகிருன். அத்தகைய நிலையில் அம்பிகை யாண்டும் இருப்பதால் அவள் யோக்யா என்னும் நாமம் படைத்தவளாகிருள்.

அம்பிகை தானே, சத்துவம் ரஜஸ் தமஸாகிய முக்குணங்களாகப் பரிணமிக்கிருள். இந்த முக்குணங்களில் ஜீவர்கள் கட்டுண்டு கிடக் கின்றனர். அச்செயலைச் செய்கின்ற அம் பிகைக்குப் போகமாயையென்று பெயர். சத்துவ குணம் ஓங்கப் பெற்ற ஜீவர்களுக்குப் பந்த பாசத்தையும் விமோசனத்தையும் ஆராய்ச்சியின் வாயிலாகப் பாகுபடுத்த இயலு கிறது. ரஜோகுணம் ஓங்கப்பெற்ற ஜீவர்கள் தீவிரமாகப் பலப்பலச் செயல்களில் ஈடுபடு கின்றனர். குணங்களில் கட்டுண்டு கிடக்கிற ஜீவர்கள் பிரபஞ்சத்தை நுகரவும் அனுபவிக்க வும் செய்கின்றனர். ஆதலால் அவர்கள் போக் தாக்கள் எனக் கருதப்படுகின்றனர். உல கைச் சரியாகப் பயன்படுத்தும் செயல் போக் யம் எனப்படுகிறது. ஜீவர்களுக்குக் குற்ற மற்ற பாங்கில் போகத்தை அம்பிகை வழங்கு வதால் அவள் யோக்யா என அழைக்கப் பெறுகிருள்.

656. **योगानन्दा யோகானந்தா**—யோகத் தின் வாயிலாக ஆனந்தமாக இருப்பவள் என் பது இந்த நாமத்தின் பொருள்.

போகத்தில் வருகிற ஆனந்தம் உடனுக் குடனே மறைந்துபட்டுப்போகிறது. ஆதலால் அந்த ஆனந்தம் ஆனந்தமாகக் கருதப்படுவ தில்லை. போகமானது ஆனந்தத்தில் துவங்கி துக்கத்தில் முடிவடைகிறது. பின்பு யோகா னந்தம் அத்தகையதன்று. யோகத்தின் மகிமை மேலானது. யோக சாதனம் ஆரம்பிக்கும் பொழுதுஆனந்தம். அதைத்தொடர்ந்து அனுஷ் டிக்கும்பொழுது ஆனந்தம். யோகாரூட நிலையில் அதைப் பூர்த்தி பண்ணுகிற பொழுதும் ஆனந் தம். ஆதலால் அம்பிகை யோகானந்த சொரு பமாக இருக்கிருள் என்பது முற்றிலும் மெய். அர்த்தநாரீசுவர தத்துவத்தில் அம்பிகை யாண்டும் சிவத்துக்கு அபின்னமாக இருக் கிருள். அதாவது சிவத்தையும், சக்தியையும் பிரித்து வைக்க முடியாது. ஒன்றுபட்டிருப்ப தில் அவள் அடைகிற மகிழ்வு அளவற்றது. ஆதலால் அவள் எப்பொழுதுமே யோகானந் தாவாக இருந்து வருகிருள்.

யோகத்தை அனுஷ்டிக்கிற ஆத்ம சாதகர் களனைவருக்கும் ஆனந்தம் என்னும் பேறு முற்றிலும் சொந்தமாகிறது. யோகியர்கள் அனுபவிக்கின்ற யோகானந்த சொருபமாக அம்பிகை இலங்குகின்ருள். அவள் படைத் துள்ள அந்தப் பெருநிலையை மனனம் பண்ணு வதற்கேற்ப யோகியினுடைய உள்ளத்தில் ஆனந்தம் பூரிக்கிறது.

ஜீவகோடிகளனைத்தும் ஆனந்த சொருபம். அத்தனை ஜீவர்களும்இடையிடையே அவரவர்க் குரிய ஜீவ வியக்தியை மறக்கிருர்கள். ஜீவ வியக்தியை மறக்கின்றபொழுது எஞ்சியிருப் பது ஆனந்தம். அவ்வேளையில் ஜீவ பிரம்ம ஐக்யம் தானுக உண்டாகிறது. அதை முன் னிட்டும் அத்தனை கோடி ஜீவர்களுக்கு ஆதார மாக இருக்கும் அம்பிகையும் யோகானந்தா என அழைக்கப்பெறுகிருள்.

ஜீவகோடிகள் அனைவரும் சுஷுப்தி அவஸ் தைக்குப் போகிற பொழுது தங்களுடைய ஜீவ வியக்திகளை ஒதுக்கித் தள்ளுகிருர்கள். சுஷுப்தி அவஸ்தையில் அத்தனை ஜீவர்களும் தங்களை அறியாது பரம்பொருளிடத்து யோகம் பண்ணுபவர்கள் ஆகிருர்கள். அந்நிலையில் அவர்கள் அடைகிற ஆனந்தமும் அம்பிகையின் ஆனந்தமும் ஒன்றுபடுகின்றன. சுஷுப்தி அவஸ்தையில் அத்தனை உயிர்களுக்கும் ஆனந் தத்தை ஊட்டுகிற அம்பிகை யோகானந்தா எனப் பெயர் பெற்றுள்ளாள்.

# புறநோக்கும் அகநோக்கும்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1974ஆம் ஆண்டு திருவேடகம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[351ஆம் பக்கத் தொடர்ச்சி]

உலகப்பற்றைக் குறைத்துத் தெய்வப்பற்றை வளர்க்கத் தெரிந்து கொண்டவன் தீரன் ஆகின்றான். அதைச் செயலுக்குக் கொண்டு வருபவன் யோகி ஆகின்றான். அதை எப்படிச் செயலுக்குக் கொண்டு வருவது? இதுவரையில் எடுத்துள்ள ஜன்மங்களிலெல்லாம் சரீரத்தில் அமைந்துள்ள இந்திரியங்கள் புறத்தே போய்ப் பழகியிருக்கின்றன. புறத்தே இந்திரியங்களைச் செலுத்துவதற்குரிய வாசனை ஜீவனிடம் அமைந்திருக்கிறது. இந்திரியங்களை நன்கு பயன்படுத்திப் புற உலகைச் சரியாகப் பொருள்படுத்துகின்ற பக்குவத்துக்கு மனிதன் வந்திருக்கின்றான். இனி,மானுடனுக்குக் கருவி கரணங்களை உள்முகமாகத் திருப்புவதில்தான் வளர்ச்சியிருக்கிறது. ஐம்பொறிகளை உள்முகமாகத் திருப்பிப் பழகவேண்டும். தன்னுள் இருக்கின்ற நிஜசொருபத்தை அறிகிற நாட்டம் ஆத்ம சாதனம் எனப்படுகிறது. உள் இருக்கின்ற ஒண்பொருளை அறிவது மனிதனுக்குச் சாத்தியம். மற்ற உயிர்களுக்கு அச் செயல் சாத்தியமில்லை. ஆகையினால்தான் மற்ற பிறவிகளையெல்லாம் விட மானுடப்பிறவி அரிய பிறவியாகக் கருதப்படுகிறது. கருவி கரணங்களை அடக்கி அந்தர்முகமாகத் திருப்பி உள்ளே இருக்கின்ற பொருளை ஆராய்ச்சி பண்ணி அறிவது செயற்கரிய செயல் ஆகிறது. ஆத்மா அமிர்த சொருபமாக இருக்கின்றது. மரணமிலாப் பெருநிலை ஆத்மாவுக்கே உரியது. நாம் ஆத்மா என்பதைக் கேட்டு அறிகின்றோம். தியானம் முதிர்ந்து வரவர நாம் ஆத்மா என்ற கேள்வி ஞானம் தெளிவாகிறது. சமாதி நிலையை யெட்டும்பொழுது நாம் ஆத்மாவே ஆகிவிடுகின்றோம். சமாதி நிலையில் வாழ்க்கைப் பிரச்னைகள் அடிபட்டுப் போய்விடுகின்றன. பிறகு ஜனன மரணம் என்பது சமாதி நிலையை அடைந்தவனுக்கு இல்லை.

ஆத்மா பிறப்பதும் இல்லை; இறப்பதும் இல்லை. ஒருவனைச் செத்துப்போய்விட்டான் என்று சொல்லுவது தவறு. தேக வியோகம் ஆனான் என்றுதான் சொல்ல வேண்டும். மேனாட்டில் தேகவியோகமானவனைப் பெட்டியில் வைத்துப் புதைத்து வைக்கிறார்கள். அவன் ஒருநாளைக்கு எழுந்திருப்பான் என்று எண்ணுகிறார்கள். அவன் எப்பொழுதும் எழுந்திருக்க மாட்டான். உயிருடன் இருக்கும் பொழுது சரீரம் நாள்தோறும் மாறி அமைந்து கொண்டிருக்கிறது. சரீரத்தைப் பூமிக்குள் புதைத்து விட்டால் அது அப்படியே இருக்காது. பத்து வருடங்கள் கழித்துப் பூமியில் புதைத்து வைத்துள்ள சரீரத்தைப் பார்த்தால் அதில் எலும்பு மட்டும்தான் இருக்கும். இன்னும் சில ஆண்டுகளுக்குப் பிறகு பார்த்தால் அவ்வெலும்பும் இருக்காது. பூமிக்குள் புதைத்து வைத்த சரீரம் ஒரு நாளைக்கு எழுந்திருக்கும் என்று எண்ணுவது மூடநம்பிக்கையாகும். நாம் சட்டையை மாற்றுவது போன்று ஆத்மா சரீரங்களை மாற்றியமைத்துக்கொண்டே இருக்கிறது. ஸ்தாவரத்தில் ஆரம்பித்து ஜங்கமத்தில் ஜீவாத்மா மானுட நிலையை எட்டி இருக்கிறது. இனி, நிரந்தரமாகச் சரீரத்தை ஒதுக்கித்தள்ளுகிற பயிற்சியை மானுடன் பெற்றாக வேண்டும். ஆத்மாவுக்கு மூலமாக இருக்கின்ற பரமாத்மாவை நாடி சரீரத்தை ஒதுக்கித் தள்ளவேண்டும். அது நல்ல கடவுள் வழிபாடு ஆகிறது. பரமாத்மாவுக்குரியவனாக ஜீவாத்மன் இருக்கின்றான். ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பை அறிந்து தான் பரத்துக்குரியவன் என்றும், பிரபஞ்சத்துக்குரியவன் அல்லன் என்றும் அறிகிறவன் விவேகநிலையை அடைகின்றான். இராமன் நல்ல விவேகம் படைத்தவனாக இருந்தான். இராமனுக்கு விவேகம் வந்ததும் அவனைப் பார்த்து வசிஷ்டரும், விசுவாமித்திரரும், ''பிரபஞ்சத்தில் நீ பெருவாழ்வு வாழலாம். பிரபஞ்ச வாழ்வு உன்னைக் கட்டுப்படுத்தாது'' என்று கூறினார்கள். இராமனுக்குக் கூறிய உபதேசம் நமக்கும் உரியதாகிறது. தற்காலத்துக்கு ஏற்ற முறையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்திருப்பதா

வது. ''பலாப்பழத்தை அரிவதற்கு முன்பு கைக்கும் கத்திக்கும் எண்ணெய் பூசிக்கொள்ள வேண்டும். எண்ணெய் பூசிக்கொள்ளா விட்டால் கையில் பலாப்பழத்தின் பிசின் ஒட்டிக் கொள்ளும். பிரபஞ்ச வாழ்க்கையில் நுழைவதற்கு முன்பு நாம் ஆத்ம சொருபம், நாம் பரமாத்மாவுக்கு உரியவர்கள் என்னும் கோட்பாட்டை அறிந்து அதில் நாட்டமுள்ளவர்களாக இருக்கவேண்டும். அப்பொழுது பிரபஞ்ச வாழ்விலுள்ள பந்தபாசம் நம்மைத் தளைக்காது.'' நாம் அறிவுடையவர்களாகப் பிரபஞ்சத்தில் வாழ்ந்திருக்க வேண்டும். பிரபஞ்சத்தில் வாழ்ந்திருப்பதற்கிடையில் பிரபஞ்சப்பற்றில் அகப்பட்டுக் கொள்ளாது இருக்க வேண்டும். பிரபஞ்சப்பற்று அதிகரிப்பதற்கேற்ப நம்மிடம் தவறுகள் நிகழும். பிரபஞ்சப் பற்று அழிகிற அளவு நாம் செய்யும் காரியம் நன்கு நிகழும்.

பிரபஞ்சப்பற்றைஅகற்றவும் பாரமார்த்திகப் பற்றை அதிகரிக்கவும் பயிற்சிதேவை. பஞ்சேந்திரியங்களைக் கட்டி ஆள்வது மிகவும் அவசியம். இதுகாறும் பஞ்சேந்திரியங்களுக்கு அடிமைகளாக நாம் வாழ்ந்து வந்தோம். அதன் விளைவாக நாம் ஜனன மரணத்துக்கு ஆளானோம். பஞ்சேந்திரியங்களை வெல்லுவது நல்ல ஆத்மசாதனம். பஞ்சேந்திரியங்களுக்கு அடிமைப்பட்டு இருப்பது போக வாழ்வாகும். பஞ்சேந்திரியங்களுக்கு அடிமைப்பட்டு வாழ்பவன் ஜீவவியக்தியை அதிகரிக்கச் செய்கின்றான். அவன் பிறவிப் பெருங்கடலில் உழல்பவனாக இருக்கின்றான். மானிடப் பிறவியை எட்டும் வரையில் ஜீவன் பஞ்சேந்திரியங்களை ஒவ்வொன்றாகப் பெற்றான். ஸ்தாவரமாக இருக்கின்ற நிலையில் ஸ்பரிச உணர்ச்சி ஒன்று தான் இருக்கிறது. புழு, பூச்சியாக மாறி அமைகின்ற நிலையில் சுவைப்பதும், மோப்பம் பார்ப்பதும் வந்து அமைகின்றன. பறவைகள், தேனீக்கள், விலங்குகள் ஆகியவை பஞ்சேந்திரியங்களை முழுமையும் பெற்றிருக்கின்றன. பஞ்சேந்திரியங்களோடு பகுத்தறிவையும் சேர்த்து மனிதன் பெற்றிருக்கின்றான். மக்களுக்கிடையிலும் பலர் பகுத்தறிவு அற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கும், விலங்குகளுக்கும் அதிக வித்தியாசம் இருப்பதில்லை. பஞ்சேந்திரியங்களையும், அறிவையும் நன்றாகப் பயன்படுத்துகின்ற விவேகம் ஒருவனுக்கு இருக்குமாயின் அவன் மானுட ஜன்மத்தை நன்கு பயன்படுத்தியவன் ஆகின்றான். பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் பிரபஞ்சத்தை நாடுவது மக்களுடைய போக்காகவும், சிற்றுயிர்களுடைய போக்காகவும் இருக்கிறது. பஞ்சேந்திரியங்களைக் கட்டி ஆண்டும் மனதைத் தெய்வத்தின்பால் திருப்பியும் வாழ்கின்றவன் நல்வாழ்வு வாழ்கின்றவன் ஆகின்றான். பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் பெறும் பிரபஞ்ச சுகத்தைக் குறைத்துவிட வேண்டும். உண்பதைச் சான்றாக எடுத்துக் கொள்ளலாம். விலங்குகளும், பறவைகளும் சுகத்துக்கு அடிமைப்பட்டு உணவை உண்கின்றன. உண்கின்ற விஷயத்தில் அவைகளுக்குக் கட்டுத்திட்டம் இல்லை. குறிப்பிட்ட வேளையில்தான் உண்ணவேண்டும், அளவோடுதான் உண்ணவேண்டும் என்னும் நியதிகள் அவைகளுக்கு இல்லை. மனிதனுக்கு அந்நியதிகளுண்டு.

புத்தர் ராஜ்யத்தைவிட்டுத் துறவியாக வெளியேறியதும் உணவு உண்ணாது பட்டினியிருந்து உடலை வலிவு இழக்கச் செய்து விட்டார். அதன் விளைவாக எழுந்து உட்காரவும் சக்தியற்றவராகப் போய்விட்டார். கல்யாண ஊர்வலத்தில் வீணையோடு பேசுவது போன்று பாடிக்கொண்டு சென்ற பாடல் ஒன்றைப் புத்தர் கேட்டார். அப்பாடலின் கருத்தாவது: ''வீணையே, உன்னுடைய கம்பிகளைத் தளர்த்தினால் உன்னிடத்திலிருந்து இனிய ஓசை வராது. அதற்குப் பதிலாக உன்னிடத்திலுள்ள கம்பிகளை முறுக்கினால் அவை தெறித்துப்போய் விடும். அவைகளை நடுநிலையில் வைத்திருந்தால் தான் உன்னிடத்திலிருந்து இனிய ஓசையை உண்டுபண்ண முடியும்.'' இக்கருத்தைக் கேட்ட புத்தருக்கு விவேகம் உதயமாயிற்று. இராஜ்யத்தில் இருந்தபொழுது சுகபோகத்தில் ஈடுபட்டு உடலைத் தெறித்துப் போகும் நிலையில் வைத்துவிட்டேன். துறவியான பிறகு பட்டினிபோட்டு அதைத் தளர்ந்து போகும்படி செய்துவிட்டேன். இவ்விரண்டையும் செய்திருக்கக் கூடாது. ''சமத்துவம், யோக உச்யதே'' என்ற கோட்பாட்டின்படி உடலைச் சமத்துவ நிலையில் வைப்பதுதான் யோக

மாகும். இவ்வுண்மையை அறிந்த பிறகு புது வாழ்வு ஆரம்பித்தார். ஆத்ம சாதனத்தில் ஈடுபடுகின்றவர்கள் மிகைபட உண்பதோ, குறைபட உண்பதோ கூடாது. நினைத்த பொழுதெல்லாம் உண்ணுவதும் கூடாது. ஆண்டில் குறிப்பிட்ட சில நாட்களுக்காவது பட்டினி இருந்து பழகவேண்டும். பட்டினி இருக்கின்ற நாட்களில் உணவைப் பற்றி நினையாது இருந்து பழகவேண்டும். உணவைப் பற்றி நினைக்கிறபொழுது பசிதோன்றும். மனதை வேறு காரியத்தில் ஈடுபடுத்தி உணவைப் பற்றி நினைக்காது இருந்து விட்டால் உபவாசம் இருப்பது வெற்றிகரமாக முடியும். உபவாசம் எத்தகைய பாங்கில் இருக்கவேண்டும் என்பதை இயேசுநாதர் பகர்ந்திருக்கின்ருர். முகத்தை வாடிப்போகும்படி செய்து உபவாசம் இருப்பதை எல்லார்க்கும் விளம்பரம் பண்ணுபவர்கள் வெளிவேஷக்காரர்களாகிருர்கள். அவர்கள் வழிபாடு சரியானதன்று. ''உண்ணுது, உறங்காது இருந்தாய் போற்றி,'' என்று இறைவன் போற்றப்படுகின்ருர். கடவுள் சரீரத்துக்கும் அப்பாற்பட்டவர். அவருக்கு உணவோ, உறக்கமோ தேவையில்லை. தேகாத்ம புத்தி படைத்துள்ள நமக்கு உணவும், உறக்கமும் தேவை. உபவாசத்தன்று இவ்வளவு நேரத்துக்கு உணவு கொடுப்பதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டு மனதைக் கடவுள் நாட்டத்தில் ஈடுபடுத்தினல் சிற்றியல்பை வெல்லுவதற்கு அது உபாயம் ஆகிறது. விவேகானந்தர் ஜீவிதத்தில் ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்கொள்வோம். அவருடைய பிற்பகுதி வாழ்க்கையில் அவருக்கு ஆஸ்துமா நோய் இருந்தது. ஆயுர்வேத வைத்தியர் அதற்கு மருந்து கொடுத்து முப்பத்து ஆறு மணிநேரம் அன்னபானம் செய்யக் கூடாது என்று பத்தியம் விதித்தார். சுவாமி விவேகானந்தர் முப்பத்து ஆறு மணிநேரம் அன்னபானத்தை நினைக்காமல் இருப்பேனுக என்று ஆழ்ந்து சங்கல்பித்தார். அவருடைய சங்கல்பத்தின் வலிமைதான் என்னே! அவருக்குப் பணிவிடை செய்துவந்த பிரம்மச்சாரிக்கும் முப்பத்து ஆறு மணிநேரம் அன்னபானத்தைப் பற்றிய எண்ணம் வரவில்லை. பலர் உபவாசத்தின் பொழுது உணவு உண்பதற்குரிய நேரத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பார்கள். அத்தகைய உபவாசத்தில் பலன் இல்லை. உபவாச சமயத்தில் உணவை நினையாது கடவுள் சிந்தனை செய்து கொண்டிருக்க வேண்டும். அப்பொழுது அது நல்ல சாதனையாகிறது. ஏகாதசி, மஹா சிவராத்திரி போன்ற புண்ணிய தினங்களில் உபவாசம் இருந்து உணவை நினையாது இருந்தால் அது நல்ல சாதனையாகிறது. உணவை நினையாது இருக்கிற அளவுக்கு உபவாசத்தில் வெற்றியடைந்தவர்களாகிருேம். 'நா' என்னும் இந்திரியத்தை முதலில் வென்று பழகவேண்டும். 'நா'வை வென்றவனுக்கு மற்ற இந்திரியங்களை வெல்லுவது சுலபம். நாம் எடுத்த ஜன்மங்களிலெல்லாம் உணவு உண்டு வளர்ந்து வந்திருக்கிருேம். உணவு உண்டு வாழ்ந்த தன் சம்ஸ்காரத்தைக் குழந்தைகளிடத்துக் காணலாம். அகப்பட்ட பொருள்களை எல்லாம் குழந்தை வாயில் வைக்கிறது. அது குழந்தைகளுக்குள்ள சம்ஸ்காரம். இராமாயணத்தில் அற்புதமான இடைச்செருகல் ஒன்றைக் காணலாம். அகஸ்தியமுனிவர் ராமன் கையில் பயங்கரமான ஆயுதங்களைக் கொடுத்துப் பஞ்சவடிக்கு அனுப்பினர். பஞ்சவடிக்கு வந்த பிறகு ராமன் லட்சுமணனிடம் பகர்ந்ததாவது:''இடத்துக்குரியவர்களிடம் அனுமதி பெருது நாம் ஒரு இடத்தில் குடிசை கட்டக்கூடாது. இந்த இடம் யாருக்குரியது என்று தெரிந்து அவரிடம் பர்ணசாலை கட்டுவதற்கு அனுமதி பெற்று வருவாயாக. அதன் பிறகு நாம் பர்ணசாலை அமைக்கலாம்.'' அந்த இடம் யாருக்குரியது என்று கண்டுபிடிப்பதற்காக லட்சுமணன் காடு முழுவதும் சென்ருன். அவ்விடத்துக்குரியவர் யார் என்பதைக் கண்டுபிடிக்கமுடியவில்லை. கடைசியாக அவன் ஒரு வில்வ மரத்தடியில் சிவலிங்கம் இருப்பதைப் பார்த்தான். ''இந்த இடத்துக்கு அதிஷ்டான தெய்வமாகச் சிவனர் இருக்கின்ருர். அவருடைய உத்தரவைப் பெறலாம்'' என்று நினைத்து அவ்விடத்தில் தியானத்தில் அமர்ந்தான்.

சிவலிங்கம் தியான மூர்த்தியாக மாறி வலக்கையால் நாவைப் பற்றிக்கொண்டும் இடக்கையைக் கௌபீனத்தின் மேல் வைத்துக்கொண்டும் இருந்த காட்சியைக் கண்டான்

அக்காட்சியைக் கொடுத்துவிட்டு அது பழைய படி சிவலிங்கமாக மாறியது. லட்சுமணன் இந்த நிகழ்ச்சியை ராமனிடம் சொன்னான். ''நமக்கு உத்தரவு வந்துவிட்டது. நீ பர்ண சாலை அமைத்துவிடலாம்'' என்றார் இராமன். ''உத்தரவு எப்படி வந்தது? எனக்கொன்றும் விளங்கவில்லையே'' என்று லட்சுமணன் கேட்டான்.'' ''மனிதன் எங்கு போனாலும் அவனுக்கு வரும் உபத்திரவத்துக்குக் காரணம் நாவை அடக்காததும் காமத்தை அடக்காததும் தான். அவ்விரண்டையும் அடக்கவேண்டும் என்பதே நீ கண்ட காட்சியின் பொருளாகும். நாம் அவ்விரண்டையும் வென்றிருக்கின்றோம். ஆகையால் நாம் எங்கிருந்தாலும் நம்மால் யாருக்கும் உபத்திரவம் இல்லை. நமக்குப் பர்ணசாலைபோட உத்தரவுகிடைத்துவிட்டது. நீ பர்ணசாலை அமைக்கலாம்'' என்றார் இராமன். நாவை அடக்குவதும், காமத்தை வெல்லுவதும் யாவரும் செய்யவேண்டிய செயல்களாகும். மனிதன் முன்னேறுவதற்கு இந்திரியங்களை வெல்லுவது முதல் பாடமாகின்றது. பஞ்சேந்திரியங்களையும் படிப்படியாக வென்று பழகுபவன் ஆத்ம சாதனத்துக்குத் தகுதியுடையவன் ஆகின்றான்.

மரணமிலாப் பெருநிலையைப் பெற மனிதன் முயல்கின்றான். உணவுக்கு அமுதம் என்பது ஒரு பெயர். உயிர் வாழ்ந்திருப்பதற்கு உணவு உதவுவதால் அதற்கு அமுதம் என்ற பெயர் வந்தது. மரணமிலாப் பெருநிலை மனிதனுக்குண்டா? என்பதை ரிஷிகள் ஆராய்ச்சி பண்ணினார்கள். ஓர் இந்திரியத்தை அடக்கினால் மற்றொரு இந்திரியம் கூர்மையுடையதாக ஆகிறது. குருடனாகப் பிறந்தவனுக்குக் காது கூர்மையாக இருக்கிறது. செவிடனாகப் பிறந்தவனுக்குக் கண் கூர்மையாக இருக்கிறது. ஐந்து இந்திரியங்களையும் அடக்கினால் என்ன ஆகும் என்பதை ரிஷிகள் பரீட்சை செய்து பார்த்தார்கள்.

ஐம்பொறிகளையும் அடக்கிப் பதினான்கு ஆண்டுகள் தவவாழ்வு வாழ்ந்தால் ஞானக் கண் உண்டாகிறது. ராமன் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்ததும், பாண்டவர்கள் பதின்மூன்று ஆண்டுகள் வனவாசம் செய்ததும் சிறந்த தவமாகிறது. ஐந்து இந்திரியங்களையும் தடைப்படுத்தும்பொழுது ஆத்ம சொரூபத்தைக் கிரகிப்பதற்கான அகக்கண் உண்டாகிறது. புறக்கண், அகக்கண் ஆகிய கண்களைச் சிவனார் பெற்றிருப்பதால் அவருக்குத் த்ரயம்பகன் என்னும் பெயர் உண்டு. பிரபஞ்சமும் அவருடைய காட்சியில் இருக்கிறது; பரசொரூபமும் அவருடைய காட்சியில் இருக்கிறது. பஞ்சேந்திரியங்களை வென்ற நிலையில் பதினான்கு ஆண்டுகள் தவ வாழ்வு வாழ்கின்றவன் ஆத்ம சொரூபத்தைத் தரிசிக்கின்றான். அந்த ஞானக் காட்சி பெற்றவனுக்குப் பிறப்பும் இல்லை இறப்பும் இல்லை. சாதனையில் இருக்கும்பொழுது ஆத்மாவைப் பற்றிக் கேட்டு அறிகின்றோம். அனுபூதியின் போது நமக்கு அது முற்றிலும் தெளிவாகிறது. ஆத்மஞானத்துக்குச் சிலர் தகுதி இல்லை என்று சொல்லுவது பொருந்தாது. யார் வேண்டுமென்றாலும் பெருநிலைக்கு வரலாம். அதற்குரிய நிபந்தனையை நிறைவேற்றுகின்ற பொழுது யாவரும் ஆத்ம ஞானம் பெறலாம். நாம் பெறுகின்ற பேறுகளிலெல்லாம் ஞானக் கண்ணைப் பெறுவதே அரிய பேறு ஆகிறது. நாம் ஆத்ம சொரூபம் என்பதை அனுபூதியில் அறியும் பொழுது வாழ்க்கை பூர்த்தியடைகிறது. ''தன்னை அறிந்தால் தலைவன் மேல்பற்றலது பின்னை ஒரு பற்றும் உண்டோ பேசாய் பராபரமே'' என்கிறார் தாயுமானவர். தன்னை ஆத்ம சொரூபமாக அறிகின்ற பொழுது தனக்கும் தன் தலைவனுக்கும் உள்ள தொடர்பு அனுபூதி வாயிலாக விளங்குகிறது. ''உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்'' என்பதுகோட்பாடு. இறைவனுக்குத் தொண்டு புரிய வேண்டும். அதற்கு மாறாகப் பிரபஞ்சத்தில் செல்வதெல்லாம் வாழ்க்கையை விரயம் பண்ணுவதாகிறது. பிரபஞ்சப் பற்றையெல்லாம் கடவுள் பற்றாக மாற்றுவது செயற்கரிய செயலாகும். கடவுளுக்கு நாம் சொந்தம். அவர் நமக்குச் சொந்தம். இதை யாரும் மாற்ற முடியாது.கடலுக்கும்,அலைக்கும் உள்ளதொடர்பை மாற்ற முடியாதது போன்று, கடவுளுக்கும் நமக்கும் உள்ள தொடர்பை மாற்ற முடியாது. கடலைச் சார்ந்து அலை இருப்பதற்கு நிகராக நாம் கடவுளைச் சார்ந்து இருக்கின்றோம். இவ்வுண்மையை நாம் உணர்கின்றபொழுது நமக்கு

மரணமிலாப் பெருநிலை வாய்க்கிறது. நம்மைப் பக்குவப் படுத்துவதற்கேற்ப இப்பொழுதோ, நாளடைவிலோ அவ்வுண்மை நமக்கு விளங்குகிறது. மனிதன் தன்னை வெல்லுதலில் எவ்வளவு தூரம் மேலே வருகின்றானோ, அவ்வளவுக்கு அவன் லாபமடைகின்றான். மரணத்தை வெல்ல வேண்டும். அதற்கு நாம் ஆத்ம சாதனத்தில் ஈடுபடவேண்டும்.

மானுடப் பிறவியில் தீவிரமாக ஆத்மசாதனை செய்வது சிறந்த செயல் ஆகிறது. ஆத்ம சாதனத்தில் ஈடுபடுவது என்றால் என்ன என்பதை நாம் அறிந்திருக்கவேண்டும். பிரபஞ்ச சுகத்தைத் தரக்கூடிய பஞ்சேந்திரியங்களை அடக்கி அவைகளை வென்று அந்தக் கரணத்தை உள்ளிருக்கின்ற அந்தராத்மாவிடத்துத் திருப்பிப் பழகுவது ஆத்ம சாதனம் எனப்படும். அதில் நாம் எவ்வளவு தீவிரமாகச் செல்கின்றோமோ அந்த அளவுக்கு விரைவில் மேலே வருகின்றோம். தீவிரமாகச் செல்வது நம் கைவசம் இருக்கிறது. நமக்காக மற்றொரு மனிதன் உணவு உண்ண முடியாது. அங்ஙனம் நாம் செய்யவேண்டிய சாதனத்தை நமக்காக மற்றொருவர் செய்ய முடியாது. நம்மை நாமே எடுக்கவும் முடியும்; நம்மை நாமே கெடுத்துக்கொள்ளவும் முடியும். பொறிகள் வாயிலாகப் புலன்கள்பால் தீவிரமாகச் செல்வோமேயானால் விரைவில் அழிந்துபட்டுப் போவோம். பொறிகளை வென்று உள்ளிருக்கின்ற ஆத்மனைத் தரிசிப்பதற்கு நம்மைப் பக்குவப்படுத்துவோமேயானால் நாம் பெருநிலைக்கு வருவோம். நாம் எத்தகைய வாழ்வு வாழ வேண்டுமென்பதைச் சான்றோர் ஒருவர் பகர்கின்றார். "இறைவா! நான் பிறப்பெடுத்த பொழுது மாயப்பிரபஞ்சத்தில் மறுபடியும் பிறக்கின்றேனே என்று எண்ணி அழுது கொண்டு பிறந்தேன். நான் பிறந்ததை மகப்பேறு வாய்த்தது என்று எண்ணிப் பெற்றோர்களும் உற்றார்களும் மகிழ்ச்சி அடைந்தனர். நான் இங்கு வாழ்வாங்கு வாழ்ந்து உன் பக்கத்தில் வந்திருப்பேனாகில் நான் வாழ்ந்த வாழ்க்கை வீணாகப்போகவில்லை. உடல்பற்றை உதறித்தள்ளிவிட்டு உன்னை நாடி வருகிற பெரு வாழ்வு நான் வாழவேண்டும். நான் பிறந்தபொழுது மகிழ்வோடு வரவேற்ற உலகத்தவர் இத்தகைய நல்லவனை இழந்துவிட்டோமே என்று வருந்தவேண்டும். இத்தகைய பெருவாழ்வை எனக்குக் கொடுத்தருள்வாயாக." இது யாவரும் விரும்பக் கூடிய பெருவாழ்வு. இத்தகைய வாழ்வில் நாம் கண்ணும் கருத்துமாக இருக்கின்ற அளவு நாம் இறைவனுக்கு அருகில் போய்க் கொண்டிருக்கிறோம். கிழக்கு நோக்கிப் போகின்றபொழுது மேற்குத் திசை புறக்கணிக்கப்படுவது போன்று கடவுளை நாடிப் போகின்ற அளவு உலகத்தை நாம் புறக்கணிக்கின்றோம். மகாபாரதத்தில் யுதிஷ்டிரர் சொர்க்கத்தை நாடிப் போகின்றபொழுது அவருடைய சகோதரர்கள் ஒவ்வொருவராக விழுந்துவிடுகின்றனர். அவர் அதைத் திரும்பிப் பார்க்காது போய்க்கொண்டே இருக்கின்றார். சொர்க்கம் சென்ற பின்பு, 'சகோதரர்கள் விழுந்தபொழுது ஏன் நீ திரும்பிப் பார்க்காது வந்தாய்?' என்று இந்திரன் கேட்டான். திரும்பிப் பார்த்திருந்தால் நானும் விழுந்திருப்பேன் என்றார் யுதிஷ்டிரர். யுதிஷ்டிரர் இங்ஙனம் சொன்னதில் நமக்குச் செய்தி இருக்கிறது. உலகத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டுப் பரத்தை நாடிப் போகிறபொழுது மீண்டும் உலக ஆசை நம்மிடம் வந்தால் அதை நாம் திரும்பிப் பார்க்கக்கூடாது. அதை நாம் திரும்பிப் பார்த்தால் விழுந்து விடுவோம். திரும்பிப்பாராது பரத்தையே நாடிப் போய்க் கொண்டிருப்போமேயாகில் மானுட ஜன்மத்தை நாம் நன்கு பயன் படுத்தியவர்கள் ஆகின்றோம்.

பொறிகள் புறத்தே போகின்றவைகளாக அமைந்திருக்கின்றன. புறத்தைக் கண்டு அதில் உள்ள நலம் கேடுகளை உள்ளபடி அறிந்து நீ தீரன் ஆவாயாக. நல்லறிவு படைத்தவனாக ஆகிக் கருவி கரணங்களை வாரியெடுத்து உள்முகமாகத் திருப்பிப் பரத்தை நாடிச் சென்று பழகு. போகமாக இருக்கின்ற பிரபஞ்சப் பற்றை ஒழித்துத் தெய்வப் பற்றை வளர்த்து வாழ்வாங்கு வாழ்ந்து பழகு.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு" என்னும் கோட்பாட்டைக் கடைப்பிடித்து வருவோமாக. இறைவன் அருளால் அத்தகைய பெருவாழ்வு நமக்கு வந்து அமைவதாகுக. (முற்றும்)

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (152) *அறிந்தோ அறியாமலோ உயிர்களனைத்தும் பரநாட்டத்திலேயே ஈடுபட்டிருக்கின்றன என்பது கோட்பாடு. சிரேயஸை நாடுகின்றவன் மேன்மையுறுகிறான். பிரேயஸை நாடுகின்றவன் கீழ்மையுறுகிறான் என்பது உபநிஷதக்கோட்பாடு. இவ்விரண்டு கோட்பாடுகளுக்கிடையில் முரண்பாடு இல்லையா?*

உயிர்களனைத்தும் பரநாட்டமே உடைத்திருக்கின்றன என்பது உண்மை. அது எப்படி என்று பார்ப்போம். நிலையற்றவைகளை ஒதுக்கி வைத்து விட்டு நிலையுற்றவைகளை அவைகள் நாடுகின்றன. மீனுக்கு நிலையுற்ற இடம் நீர். நிலம் அதற்கு உதவாது. மீனை எடுத்து நிலத்தில்போட்டால் துள்ளிக்குதித்து நீரை எட்டி அதில் அது நிலைத்திருக்கிறது. பறவை ஒன்றைப்பிடித்துக் கூட்டில் அடைத்து வைத்தால் அது தன்னை விடுவித்துக்கொண்டு வானத்தில் பறந்து செல்ல முயலுகின்றது. வனத்தில் வாழும் விலங்கொன்றை வீட்டில் பிடித்து வைத்தால் மீண்டும் அது வனத்துக்கு ஓட முயலுகின்றது. மனிதன் தன்னந் தனியனாக வனத்தில் வாழ்ந்திருக்க விரும்புவதில்லை.

ஒவ்வோர் உயிரும் அதற்குச் சொந்தமான இடத்திற்குப் போகவே விரும்புகிறது. கடைசியாகப் பிரபஞ்ச வாழ்க்கையில் எவ்வுயிரும் நிலைத்திருக்க விரும்புவதில்லை. ஏனென்றால் அது அநித்தியமானது. அநித்தியமான இருப்பிடம் மரணத்தில் முடிவுறுகிறது. மரணத்தை எவ்வுயிரும் விரும்புவதில்லை. எல்லா உயிர்களும் மரணமிலாப் பெருவாழ்வையே நாடியலைகின்றன. மரணமிலாப் பெருவாழ்வு பரத்தின்கண் உளது. அடுத்தபடியாக உயிர்களனைத்தும் ஆனந்தத்தை நாடியலைகின்றன. துன்பம் தருபவைகளினின்று அவைகள் விலகிக் கொள்ளுகின்றன. மரணமிலாப் பெருவாழ்வும் பேரானந்தமும் பரத்தின் பாங்குகளாம். அத்தகைய பாரமார்த்திகப் பெருநிலையையே உயிர்களனைத்தும் நாடுகின்றன என்பது வெளிப்படை.

சிரேயஸ், பிரேயஸ் ஆகிய இரண்டுக்குமிடையில் சிரேயஸ் மேலானது. பரநாட்டமே சிரேயஸ் எனப் போற்றப்படுகிறது. பிரேயஸ் என்பது பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் பெறுகிற பிரபஞ்ச இன்பம். பாரமார்த்திகப் பெருநிலையைப் பிரபஞ்சத்தில் தேடியலைகிறவன் ஏமாற்றமடைகிறான்; துன்புறுகிறான். அவனுடைய நாட்டம் தோல்வியாக முடிகிறது. பிரபஞ்ச வாழ்வே அதற்குச் சான்றாகிறது. பஞ்சேந்திரியங்களை அடக்கிப் பிரபஞ்ச அதீதத்திலிருக்கும் பரம்பொருள் நாட்டம் பூணுவது சிரேயஸ். உயிர்களனைத்தும் பாரமார்த்திக நாட்டம் படைத்திருக்கின்றன என்பது வெளிப்படை. அப்பாரமார்த்திகத்தைப் பிரபஞ்சத்தில் தேடுவது பிரேயஸ். அதில் தோல்வி உண்டாகிறது. அப்பெருநிலையைப் பரம்பொருளிடத்துத் தேடுவது சிரேயஸ். அதில் மனிதன் மேன்மையுறுகிறான், வெற்றியடைகிறான். சரியான வழியில் போகிறவனுக்கு வெற்றி; சரியல்லாத வழியில் போகிறவனுக்குத் தோல்வி. ஆதலால் முரண்பாடு இல்லை.

கேள்வி: (153) *சிருஷ்டி கர்த்தா பிரம்மனுக்கு ஐந்து தலைகள். அவைகளுள் ஒன்றைச் சிவனார் கிள்ளி எறிந்தார். சிவனார் அப்படிச் செய்தது எதற்காக?*

புராணக் கதையும், தத்துவ விளக்கமும் இந்நிகழ்ச்சியில் இணைக்கப்பட்டிருக்கின்றன. துவக்கத்தில் சிவனாருக்கும் ஐந்து தலை; பிரம்மதேவனுக்கும் ஐந்து தலை. பார்வதி பரமேசுவரனுக்குத் திருமணம் நடந்தபொழுது அந்தச் சடங்கைப் பிரம்மதேவன் செய்துகொண்டிருந்தான். அப்பொழுது அவனுடைய ஐந்து தலைகளுள் ஒரு தலை காதல்கொண்ட பாங்கில் அம்பிகையைப் பார்த்தது. அக்குற்றத்தை அறியவந்த சிவனார் குற்றம் செய்த தலையைக் கிள்ளி எறிந்து விட்டார். இது புராணக் கதை. இதில் பொருள் இல்லை. ஆனால் சிவனார் யாண்டும் ஐந்து தலை உடைத்திருப்பது தத்துவ விளக்கம். பிரம்மதேவன் யாண்டும் நான்கு தலை உடைத்திருப்பது தத்துவ விளக்கம். சிவனாருடைய நான்கு தலைகள் பிரபஞ்சத்தைப் பொருள்படுத்திப் பிரபஞ்ச சொருபமாக இருக்கின்றன. ஐந்தாவது தலை பிரபஞ்சத்துக்கு அப்பாலுள்ள அதீத நிலை

யைக் குறிக்கிறது. சிவனார் மூன்று கண்களை உடைத்திருப்பதிலும் இதே கோட்பாடு அடங்கியிருக்கிறது. அவருடைய சாதாரணக் கண்களிரண்டும் பிரபஞ்சக் காட்சிக்குப் பயன் படுகின்றன. அவருடைய அசாதாரணமான கண்ணாகிய நெற்றிக்கண் பரவஸ்துவின் காட்சிக்குப் பயன்படுகிறது. இகம் பரம் ஆகிய இரண்டும் சிவனார் காட்சிக்கு எட்டுகின்றன. மற்று பிரம்மதேவனுடைய காட்சிக்கோ இகம் மட்டும் எட்டுகிறது. இகம் கால, தேச, வர்த்த மானமாக இலங்குகிறது. நான்கு யுகங்களாக இருப்பது காலத்தின் கூறு. நான்கு திக்கு களாக இருப்பது இடத்தின் கூறு. கிருத யுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்களுக்கு நான்கு தலை. கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆக நான்கு திக்குகளுக்கு நான்கு தலை.

சிருஷ்டியில் அமைந்துள்ள உயிர்வகைகள் அனைத்திடத்தும் பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் ஆகிய நான்கு படித்தரங் கள் அமைந்திருப்பதற்குச் சான்றாகப் பிரம்ம தேவனிடம் நான்கு தலைகள் இருக்கின்றன. ஆக சிவனார் ஐந்து தலை படைத்திருப்பதும், பிரம்மதேவன் நான்கு தலைகள் படைத்திருப் பதும் தத்துவ விளக்கங்களாகின்றன.

கேள்வி: (154) **முனிவர்கள் துறவியர். ஆனால் சிலர் கிருஹஸ்தர்களாயிருந்து மக் கட்பேறும் அடைந்திருக்கிறார்கள். கோப தாபங்கட்கும் உட்பட்டிருக்கிறார்கள். முனி வர்கள் ஏன் மற்றவர்களைப்போல் கீழ் நிலைக்கு வருகிறார்கள்?**

இவ்வுலக வாழ்க்கைக்கு இரண்டாந்தரமான இடம் கொடுத்துப் பாரமார்த்திகப் பெருவாழ் வுக்கே முதன்மை கொடுத்திருப்பவர்கள் முனி வர் எனப்படுகின்றனர். மேலான பெரு வாழ்வைச் சதா மனதில் எண்ணிக்கொண்டி ருப்பவர்கள் முனிவர்கள் எனப்படுகின்றனர். நாளடைவில் ஞானிகள், பக்தர்கள், யோகிகள் எனப் பாகுபடுத்தப்பட்டவர்கள் பண்டைக் காலத்தில் முனிவர்கள் என அழைக்கப்பட்ட னர். அவர்களுள் பண்பில் மேல் நிலைக்கு வந்தவர்கள் ரிஷிகள் ஆகிறார்கள்.

மனிதனுடைய மனப்பான்மைக்கு ஏற்ப அவன் துறவியாகவோ, இல்வாழ்பவ னாகவோ இருக்கலாம். இவற்றுள் எதை வேண்டுமானாலும் கடைப்பிடித்து மனிதன் பண்பாட்டில் மேல் நிலைக்கு வரலாம். ஆத லால் முனிவர்களுள் ஒரு சிலர் துறவியர்களா கவும், மற்றும் சிலர் இல்வாழ்பவர்களாகவும் இருந்து வந்தது இயல்பே. இல்வாழ்பவர்கள் இரண்டொரு மகப்பேறு பெறுவது உலகுக் குச் செய்யும் கடமையாகிறது. அதன் பிறகு அவர்களுடைய நாட்டம் முற்றிலும் பரத்திற்கு உரியதாகிறது. பரநாட்டத்தில் ஈடுபட்டதினா லேயே அவர்கள் கோபதாபங்களை வென்றுவிட் டார்கள் என்று சொல்ல முடியாது. பரநாட் டத்தில் ஈடுபட்டிருப்பதற்கிடையில் அவர்க ளுக்குப் பிடிக்காத விஷயங்களைக் குறித்து அவர்கள் கோபித்துக்கொண்டது இயல்பே. சில பதவிகளையோ, பொருள்களையோ பெறு தற்கு அவர்கள் அவாக்கொண்டதும் உண் மையே. கோபதாபங்களைத் தாற்காலிகமாகப் பெறலாம். பிறகு அவைகளை வென்றவர்கள் மேல்நிலைக்குப் போனார்கள். கோபதாபங்கட் குத் திரும்பத் திரும்ப அடிமையானவர்கள் கீழ் நிலைக்கு வருகிறார்கள். மானுட முயற்சியில் மேன்மைக்கும் இடமுண்டு; மேன்மையினின்று வழுவுகிறவர்கள் கீழ்மையும் அடைகிறார்கள் என்பதற்கு முனிவர்களுடைய வாழ்வே சான் றாகிறது.

கேள்வி: (155) **கையில் வெற்றிலை, அஞ்சனம் அல்லது மை வைத்துப் பார்த்துச் செய்தி கள் அறிவதாகக்கூறுவது உண்மையா?**

சிறுவர்கள் கையில் வெற்றிலையைக் கொடுத்து அதன்மீது அஞ்சனம் அல்லது மை ஒரு புள்ளி வைப்பார்கள். விளக்கு வெளிச் சத்தில் அப்புள்ளியை உற்றுப் பார்க்கும்படி அச் சிறுவன் ஏவப்படுவான். சில சமயங் களில் மக்கள் வருவது போன்ற காட்சிகளை அச்சிறுவன் மையினுள் காண்கிறான். திருட் டுப் போனதைக் கண்டுபிடிக்க இந்த முறை உதவுகிறது என்று சிலர் நம்புகின்றனர். அஞ் சனம் வைத்துப் பார்ப்பவர்களுடைய உதவி யையும் நாடுகின்றனர். ஏதோ ஒரு கொள் கையாக இது இருந்து வருகிறது. இதன் மூலம் உண்மைகண்டறியப்பட்டதற்குச்சான்று இதுவரையில் கிடைத்தது இல்லை. ஆதலால் இதில் கருத்தைச் செலுத்துவது பொருந்தாது.

# அன்னை இல்லம்

(சுவாமி ஸதானந்தர்)

அன்னை இல்லம் என்றால் எத்தனை புனிதமான எண்ணங்கள் மனதில் எழுகின்றன! ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பக்தர்களுக்குத் தூய அன்னை சாரதாமணி தேவியாரின் அருள் முகம் அளவற்ற அன்பின் திருவடிவம், எளிய, தூய தவ வாழ்வு வாழ்ந்த அந்தத் திருமகளின் தோற்றம் மனதில் எழுகின்றது. அவர் பிறந்து, வாழ்ந்த ஜெயராம்பாடியில் உள்ள சிறு கூரை வீடும், தக்ஷிணேசுவரக் காளி கோவிலில் வாத்திய மண்டபத்தின் கீழ் உள்ள மிகச் சிறிய அறையும் கண் முன் வருகின்றன. தூய அன்னையாரின் சரித்திரத்தை அறிந்தவர்களுக்கு அவர்களது மனதுக்கு எட்டியவாறு எண்ணங்களும் கருத்துக்களும் தோன்றுகின்றன. அதற்கு மேல் ஈண்டு ஆராய்வோம்.

அன்னை என்றால் உலக நாயகி. இல்லம் என்றால் வீடு. இந்தப் பிரபஞ்சம் முழுவதும் அன்னை இல்லம் எனப்படுகிறது. இவ்வுலகமாகிய வீட்டில் அவள் குடியிருக்கிறாள். ஜீவ கோடிகளாகத் தோன்றியிருப்பவளும் அவளே. இப்பிரபஞ்சத்தின் உயிராக, ரசமாக, சத்தாக, சித்தாக, ஆனந்தமாக, ஜீவகலையாக, உயிர் ஓவியமாக, நாயகியாக, ஈசுவரியாக விளங்குபவள் அவளே. நாம் அனைவரும் அன்னையின் குழந்தைகள் ஆவோம். ஆ! இந்தக் கருத்து நமது மனதுக்கு எவ்வளவு எழுச்சியை ஊட்டுகின்றது! நாம் அனைவரும் எவ்வளவு பெரிய குடும்பத்துக் குழந்தைகள்! எத்தகைய பெரிய உயர் குடி மக்கள்! எவ்வளவு புனிதமான, புராதனமான பரம்பரை! நமக்கு அழிவு ஏது? குறை ஏது? இன்ப துன்பங்கள் ஏது? சிறுமை ஏது? நம்மால் எப்படித் தீமை செய்ய முடியும்? நாம் யாரை வெறுக்க முடியும்? நம் அன்புக்குப் பாத்திரமாகாதவர் யார்? நாம் ஸ்ரீ அம்பாளின் குழந்தைகள்.

நாம் குடியிருக்கும் வீட்டிற்கு ராம பவன், கிருஷ்ண பவன், அன்னை இல்லம் என்றெல்லாம் பெயர்கள் வைக்கிறோம். அதாவது அந்த வீடு அவரவர் இஷ்ட தெய்வத்தினுடையது என்று பொருள் ஆம். இவ்வுலகம் யாவும் அவளுடைய உடைமை. நாமும் நம்முடைய அனைத்தும் அவளுடைய உடைமைகள். எதிலும்நாம் உரிமை பாராட்ட முடியாது. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உபதேசமொழிகளில் கடவுள் இரண்டு தடவைகளில் சிரிக்கிறார் என்று படிக்கிறோம் அல்லவா? உயிரும் நம்முடையதன்று. அது நம் கைவசம் இல்லை. பூமியும் சொத்தும் சுதந்திரமும் நம்முடையவையல்ல. எல்லாம் உன் உடைமை. எல்லாம் உன் செயல். நானும் உன்னுடையவனே. இந்த உண்மையை உணர்தல், நமது அகங்கார மமகாரங்களைத் தேய்க்கிறது, உலக வாழ்வின் சுமையைக் குறைக்கிறது. தாயே, எல்லாம் நன்மைக்கே.

'நான் குடியிருந்த கோயில், எனது அன்னை இல்லம் வீழ்ந்து போயிற்றே' என்று பட்டினத்தாரும், ஸ்ரீ சங்கரரும் இறந்து போன தங்கள் தாயார்களின் சடலங்களின் முன்நின்று வருந்துகின்றனர். நம் தாயே நமக்கு **அன்னை இல்லம்** ஆகின்றாள். 'கல்கத்தா, சென்னை, போன்ற பெரிய நகரங்களுக்குப் போனால் முதலில் ஒரு இருப்பிடத்தைத் தேடிக்கொள். இல்லாவிட்டால் இரவில் நீ சிரமப்படுவாய்' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்கிறார். அதே போல இப்பிரபஞ்சத்தில் தோன்றும் உயிர்கள் அனைத்தும் தம் இல்லத்தைத் தேடிக் கொள்கின்றன. அதை விளக்கும் புராணக் கதை ஒன்று உண்டு. அஷ்டவசுக்கள் வசிஷ்டர் சாபத்தால் இவ்வுலகில் மானுடராகப் பிறக்க வேண்டி ஏற்பட்டது. அவர்கள் எண்மரும் கூடிக் கங்கா தேவியை இப்பூவுலகில் தங்களுக்குத் தாய் ஆகும்படி வேண்டிக்கொண்டார்கள். கங்கா தேவியை இவ்வுலகில் தங்கள் **அன்னை** இல்லமாக ஆக்கிக் கொண்டார்கள். அதன் விளைவு எவ்வளவு மகத்தானதாக ஆயிற்று! ஏழுவசுக்கள் பிறந்த உடனே விடுதலையடையவும் சாபத்துக்குக் காரணமான வசு மட்டும் நெடிது இப்பூவுலகில் வாழவும் அவள் செய்தாள். சாபத்துக்குக் காரணமான வசு பீஷ்மராகப் பிறந்தார். அவரது வாழ்வு புனிதம், பக்தி, வீரம், தியாகம், நீதி, அறிவு, தவம், பரிபூரண பிரம்மசரியம் நிறைந்த தெய்

வீக வாழ்வு என்பது நமக்குத் தெரியும். மானுட ஜன்மத்தை உலகிற்கு என்றென்றைக்கும் முன் மாதிரியாக, ஆதர்ச ஜீவிதமாக ஆக்கிவிட்டார் பீஷ்மர்! அவரைப்போல பரிபூரணமான வாழ்வு வாழ்ந்தவர் யார்? அதெல்லாம் அன்னை இல்லத்தின்சிறப்பு ஆகும். அவர் பிறந்தவுடன் கங்கா தேவி அவரை ஆளாக்கி சந்தனு மஹாராஜனிடம் ஒப்படைப்பதாகச் சொல்லிக் கொண்டு போய்விட்டாள். தனுர் வேதத்தைப் பரசுராமரிடமும், வேத வேதாந்தங்களை வசிஷ்டரிடமும், ராஜ தர்மத்தை பிருஹஸ்பதி, சுக்கிராச்சாரியார் ஆகியவர்களிடமும் கற்கும்படி செய்தாள். அந்தத் தெய்வத்தாயின் வளர்ப்பின் விசேஷம் பீஷ்மரது வாழ்வில் விளங்குகிறது. நமது அன்னையே நமக்கு இல்லமாக இருந்து போஷித்து வந்தாள். அவளது தபசே நம்மை இந்த நிலைக்கு ஆளாக்கி விட்டிருக்கிறது. மாதா, பிதா, குரு, தெய்வம். அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். தாயிற்சிறந்த கோயிலுமில்லை. இவை சத்திய வாக்குகளாகும். கடவுள் அன்புக்கு அடுத்தபடியில் இருப்பது தாயன்பு. அவள் கொடுத்த பிதுரார்ஜித சொத்தே இந்தச் சரீரம். இது என் தகப்பனார் வழிவந்த சொத்து, இது தாயார் வீட்டுச் சொத்து என்று நாம் ஸ்தாவர ஜங்கம சொத்துக்களைப் பற்றிப் பேசுகிறோம். சரீரமே உண்மையான பிதுரார்ஜித சொத்தாகும். நம்மைப் பெற்று வளர்த்து ஆளாக்கிவிட்ட தாயும் அன்னை இல்லம் எனப்படுகிறாள்.

பால கணபதி பெண் பூனைக் குட்டி ஒன்றுடன் விளையாடினான். பூனைக்குட்டியின் முகத்தில் அவன் கைவிரல் நகம்பட்டுக் காயமாகி விட்டது. பிறகு தன் தாயிடம் ஓடினான். பார்வதிதேவி தன் தனயனை அன்புடன் தன் மடிமீது அமர்த்திக்கொண்டு அவனுடன் மகிழ்வோடு உரையாடினாள். அப்போது அம்பிகையின் முகத்தில் காயம் ஏற்பட்டிருப்பது கணேசன் கண்ணில் பட்டது. இதென்னம்மா காயம்! என்று கணபதி ஆவலோடு கேட்டான். உன்னால் ஏற்பட்ட காயம்தான் என்று அம்பாள் சொன்னாள். கணபதிக்கு ஆச்சரியமாக இருந்தது. நீ ஒரு பெண்பூனைக் குட்டியுடன் விளையாடிக் கொண்டிருந்த போது உன் நகம்பட்டு ஒரு கீறல் பட்டதல்லவா! அந்தக் கீறல்தான் இது என்றாள் அம்மை. ஆம். உலகிலுள்ள எல்லாப் பெண்களும் என் அம்சங்கள். பெண் சரீரம் எனது கோவில் என்றாள் தாய். ஞான கணபதிக்கு உடனே விளங்கியது. இனி எந்தப் பெண்பாலைத் தன் சக்தி அம்சமாக, மனைவியாக ஏற்றுக்கொள்ள இயலும்? எல்லாம் தன் தாய் பராசக்தியின் அம்சம், அன்னை இல்லம் ஆயிற்றே ஆகையால் அவர் என்றும் நைஷ்டிக பிரம்மசாரியாகவே இருந்து வருகிறார் என்று புராணம் விளக்குகிறது. தூய அன்னையார் ஸ்ரீ ராமகிருஷ்ணரை 'என்னை எங்ஙனம் கருதுகிறீர்கள்?' என்று கேட்டார். அன்னை பராசக்தி சந்திரமணி தேவியாராக வடிவெடுத்து வந்து இந்தச் சரீரத்தை ஈன்றெடுத்தாள். சாரதையாக இன்னொரு வடிவெடுத்து வந்து இந்தச் சரீரத்துக்குப் பணிவிடை செய்கிறாள். இதுவே எனது மனோபாவம். இதற்கு மாறாக நினைக்கவோ, இணக்கம் வைக்கவோ என்றைக்குமே என்னால் இயலாது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பதில் சொன்னார். இது நல்ல ஆத்ம சாதனம்.

இப் பிரபஞ்சம் அன்னை இல்லம், நமதுவீடு அன்னை இல்லம், நமது தாய் அன்னை இல்லம், நமது சரீரம் அன்னை இல்லம், உலகிலுள்ள பெண்பாலார் அனைவரும் அன்னை இல்லம். இப்பிரபஞ்சம் அனைத்தும் அம்பிகையினிடத்திருந்து வந்தது. அவளுடைய மகிமையை அது விளக்கிக் கொண்டிருக்கிறது. எல்லாம் அவள் உடைமை, எல்லாம் அவள் செயல். **या देवी सर्व भूतेपु मातृ रूपेण संस्थिता । नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ।** எந்தத் தேவி எல்லா உயிர்களிடத்திலும் தாய்மை வடிவாக இருக்கின்றாளோ அந்தத் தேவியை மீண்டும் மீண்டும், வணங்குகிறேன். அன்புக்கு அடைக்கும் தாள் ஏது? பீஷ்மரைப் போன்று நான் எடுத்த மானுட ஜன்மத்தை மேன்மை நிறைந்தது ஆக்குவாயாக. நீதான் எனக்கு வேண்டும். இப்பிரபஞ்சத்துடனும், எல்லா உயிர்களுடனும் எல்லாப் பெண்பாலாரிடமும் தெய்வீகமான இணக்கம் வைக்க அருள் புரி. இத்தகைய பிரார்த்தனையும் மனப்பான்மையும் நல்ல அம்பிகை வழிபாடு ஆகிறது. அம்பாளின் அருளால் உத்தமமான ஆத்ம சாதகர்கள் ஆவோமாக.

# ஏகலைவ்யனின் குருபக்தி

[340ஆம் பக்கத் தொடர்ச்சி]

காட்சி 3

(ஹஸ்தினபுரத்தில் துரோணாச்சாரியருடன் அர்ஜுனன், பீமன், துரியோதனன், ஜயத்ரதன் ஆகியோர் உரையாடிக்கொண்டிருக்கிறார்கள்.)

துரோணாச்சாரியர்: மாணாக்கர்களுள் தலை மாணாக்கன், இடை மாணாக்கன், கடை மாணாக்கன் என்று மூன்று தரத்தினர் இருக்கின்றனர். நீங்கள் எல்லாரும் கிட்டத்தட்ட தலை மாணாக்கர்களாய்த் திகழுகின்றீர்கள். அது எனக்குப் பெரு மகிழ்ச்சியூட்டுகின்றது.

ஜயத்ரதன்: ஆச்சாரியரே, தலைமாணாக்கனுடைய பாங்கைத் தயவுசெய்து கொஞ்சம் விரித்து விளக்குங்கள்.

துரோணாச்சாரியர்: தலைமாணாக்கனிடம் ஏராளமாகக் குருபக்தி இருக்கிறது. கலையில் முன்னேற்றம் அடைவதற்குக் குருபக்தி இன்றியமையாதது. வெள்ளத்தனைய மலர் நீட்டம் மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு என்பது கோட்பாடு. இந்த உயர்வு பெரிதும் குருபக்தியினின்று வருகிறது. உயிரைச் சார்ந்து உடல் இருப்பதுபோன்று குருவைச் சார்ந்து சிஷ்யனிருக்கிறான். அதுவே குரு பக்திக்கு விளக்கமாகிறது. குரு புகட்டுவதை ஒருமை மனதுடனிருந்து சிஷ்யன் ஏற்கிறான். மனம் குவிந்திருப்பதற்கேற்ப குரு புகட்டுகிற பாடம் சிஷ்யனுடைய உள்ளத்தில் பதிகிறது. நூலின் இழைகள் நாலாபக்கமும் விரிந்திருந்தால் அந்த நூல் ஊசி ஒன்றன் காதில் செல்லாது. நூல் இழைகள் ஒன்று சேர முறுக்கப்பட்டிருக்குமாகில் அந்த நூலை எளிதில் ஊசியின் காதில் செலுத்தலாம். அதே விதத்தில் எந்த மாணாக்கனுடைய மனது குரு புகட்டுகிற பாடத்தில் குவிந்திருக்கிறதோ அந்த மாணாக்கன் அப்பாடத்தை எளிதில் நன்கு கற்கிறான். அல்லும் பகலும் குரு புகட்டியதையே அவன் எண்ணிக்கொண்டு இருக்கிறான். மூன்றாவதாகக் குருவுக்குப் பணிவிடை பண்ணுவதில் தலை மாணாக்கன் கண்ணும் கருத்துமாயிருக்கிறான். ஏவா மக்கள் மூவா மருந்து என்பது கோட்பாடு. இன்னின்ன காலத்தில் இன்னின்ன கிருத்தியங்களைச் செய் என்று குருவானவர் சிஷ்யனைத் தூண்ட வேண்டியதவசியமல்ல. எந்தச் சந்தர்ப்பத்தில் எத்தகைய பணிவிடையைப்பண்ணவேண்டும் என்பதைத் தலை மாணாக்கன் யூகத்தால் அறிந்துகொள்ளுகிறான். பணிவிடை பண்ண வேண்டுமென்று அவனை யாரும் தூண்ட வேண்டியதவசியமல்ல. பணிவிடையின் வாயிலாக மாணாக்கனொருவன் தன்னுடைய மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களையும் குருவுக்கு உரியனவாக்குகின்றான். விறகுக்கட்டை ஒன்று தீக்கு உரியதாக்கப்படுகிறபொழுது அது தானே தீயாக வடிவெடுத்துத் திகழ்கிறது. அங்ஙனம் திரிகரணங்களால் குரு சேவை செய்கின்றவனுக்குக் குருவின் பண்புகள் யாவும் சொந்தமாகின்றன. நான்காவதாக நடந்துசெல்லும் மனிதனை அவனுடைய நிழல் சார்ந்திருப்பது போன்று ஆச்சாரியனை முற்றும் சார்ந்திருக்கும் மாணாக்கன் நாளடைவில் குருவுக்கு நிகரானவன் ஆகிறான். எதிர்காலத்தில் ஒருவன் எத்தகைய தலைவன் ஆகப் போகிறான் என்பது இப்பொழுது அவன் எத்தகைய மாணாக்கனாக இருக்கிறான் என்பதினின்று விளங்கும். தன்னுடைய இச்சா சுதந்திரம் முழுதையும் யார் ஒருவன் குருவினிடம் ஒப்படைக்கிறானோ அவன் குருவினிடமிருக்கும் கலைகளையும் ஏனைய பண்புகளையும் இலகுவாகப் பெறுகிறான்.

ஜயத்ரதன்: ஆச்சாரியரே, தாங்கள் எங்கள் எல்லார்க்கும் தனுர் வித்தை பயிலுவித்து வருகிறீர்கள், இவைகளை எதிர்காலத்தில் நாங்கள் எப்படிப் பயன்படுத்துவது?

துரோணாச்சாரியர்: ஆயுதம் இல்லாதவன் அரை மனிதன் என்பார்கள். ஆயுதம் உடைத்திருத்தல் என்பது வெறுமனே ஆயுதத்தைக் கையில் ஏந்தியிருப்பதாகாது. அந்த ஆயுதத்தை எந்தெந்த சந்தர்ப்பங்களில் எப்படியெல்லாம் பயன்படுத்தலாம் என்பதைப் பயிற்சியின் மூலம் அறிந்திருப்பவனே ஆயுதம் படைத்தவனாகிறான். எதிர்காலத்தில் நீங்கள் எல்லாரும் வெவ்வேறு ராஜ்ஜியங்களை ஆளப் போகின்றீர்கள். அரசாட்சி புரிகின்ற

ஒருவனிடத்து எவ்வளவுக்கெவ்வளவு போர்த் திறமை இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அவன் தன்னுடைய ராஜ்யத்தை நன்கு பாது காப்பான்.

**அர்ஜுனன்:** ஆயுதம் கையாளுவதில் வல்லவனுயிருப்பவன் வம்புச் சண்டைக்குப் போகலாமா?

**துரோணுச்சாரியர்:** தன்னுடையதிறமையை முன்னிட்டு யார் ஒருவன் தற்பெருமை பூணு கிருனே அவன் அதிவிரைவில் தன்னுடைய திறமைகள் யாவையும் இழப்பது உறுதி. வம்புச் சண்டைக்குப் போகிறவன் பெரும்பாலும் தன்னைவிட எளியவனுயிருப்பவன் மீதே கலகத்தைக் கிளப்புகிருன். அத்தகையவனும் அதிவிரைவில் தன் ஆதிக்கத்தை இழப்பது உறுதி.

**பீமன்:** போர்புரிவதற்குச் சந்தர்ப்பம் வாய்க்காத விடத்துப் போர் வீரன் ஒருவன் எப்படி நடந்துகொள்ளவேண்டும்?

**துரோணுச்சாரியர்:** நாடு ஆளுகிற அரசன் ஒருவன் சண்டை சச்சரவில்லாத சமாதான காலத்திலும் போர்ப் பயிற்சியைப் புரிந்து கொண்டேயிருக்கவேண்டும். சண்டைநிகழுகிற பொழுது சேனைகள் எத்தகைய பயிற்சிகளை யும் உற்சாகத்தையும் பெற்றிருக்கிருர்களோ அதே பயிற்சிகளையும் உற்சாகத்தையும் காலமெல்லாம் வளர்த்து வரவேண்டும். அரசன் ஒருவனுக்கும் அவனுடைய சேனைக்கும் யுத்த காலமும் சமாதான காலமும் ஒன்றே. எத்தகைய நிகழ்ச்சி எக்காலத்தில் எப்படி நேர்ந்தாலும் அதை உடனுக்குடனே சமாளிக்க வல்லவனுயிருப்பவனே நல்ல பயிற்சி பெற்றவனுகிருன்.

**துரியோதனன்:** போர் புரியாது ஆயுளை முடிவுக்குக் கொண்டு வருகிறவன் ஒருநாளும் க்ஷத்திரியன் ஆகமாட்டான் என்னும் கொள்கை ஒன்று உளது அல்லவா? ஆயுட்காலம் முழுதிலும் சண்டைக்குச் சந்தர்ப்பம் வாய்க்காவிட்டால் க்ஷத்திரியன் ஒருவன் அனர்த்தமாய் வாழ்ந்தவன் அல்லவா?

**துரோணுச்சாரியர்:** இது ஒரு சிறந்த கோட்பாடு. எந்த நொடிப்பொழுதில் ஆனுலும் சரி க்ஷத்திரியனெருவன் போருக்குப் போக ஆயத்தமாயிருக்க வேண்டும். ஆனுல் விலக்கக் கூடிய போரை அவன் வேண்டுமென்றே மேற்கொள்வானுகில் அவன் அழிந்து பட்டுப் போவான். முறை வழுவிப் போர்புரிவது க்ஷத்திரிய தர்மம் ஆகாது. போர் புரிய வேண்டிய இடத்தில் அதைத் தவிர்க்க முயலுகிறவனும் க்ஷத்திரியனுகமாட்டான். தன்னுடைய கடமையை முறையாக ஆற்றுதற்கு ஆயத்தமாயிருப்பவன் போர் புரிந்தவனுகிருன். எது ஆக்கிரமிப்பு எது முறையான யுத்தம் என்பதைச் சரியாகப் பாகுபடுத்தத் தெரிந்து கொண்டவனே நல்ல க்ஷத்திரியனுகின்ருன்.

**அர்ஜுனன்:** வில் வித்தையில் மந்திர சக்தியைக் கையாளத் தெரிந்தவனே அக்கலையில் நிபுணன் ஆகிருன் என்னும் கோட்பாடு இருக்கிறது. மந்திர சக்தியை நாங்கள் எப்பொழுது எவ்வாறு பெறுவோம்?

**துரோணுச்சாரியர்:** இக்கோட்பாடு தனுர் வேதத்தின் உச்சநிலையாகும். மந்திர சக்தியைப் பெறுவதற்குப் போர் வீரன் ஒருவன் தன் மனதை முற்றிலும் பண்படுத்தவேண்டும். மனப்பண்பாடு அடையப் பெற்றவனுக்கே மந்த்ர சக்தியின் முதல் பாடம் புகட்டப்படும். இரண்டு மாணுக்கர்களுடைய மனபரிபாகம் ஒரே விதத்தில் அமைவதில்லை. அந்தந்த மன பரிபாகத்திற்கேற்ற மந்திரம் உபதேசிக்கப்படுகிறது. ஒருவனுக்கு உபதேசிக்கிற மந்திரத்தை மற்ருெருவன் அறிந்துகொள்ளமாட்டான். தான் பெற்றுள்ள பயிற்சியை எந்த மாணுக்கனும் விளம்பரப்படுத்தலாகாது. விளம்பரப்படுத்துதற்கேற்ப மந்த்ர சக்தி அவனிடமிருந்து மறைந்துபட்டுப் போகிறது. வெறும் வில் வித்தையை யார் வேண்டுமானுலும் பயின்று மேன்மையுறலாம். ஆனுல் மந்த்ர சக்தியோடு கூடிய அம்புக்கு அஸ்திரம் என்றும் சஸ்திரம் என்றும் பெயர்கள் வந்துள்ளன. அஸ்த்ர சஸ்த்ரங்களில் வீரன் ஆவது உபாசனையோடு கூடிய அலாதி பயிற்சியாகிறது.

**அர்ஜுனன்:** அஸ்த்ர சஸ்த்ர வித்தையில் ரகுராமன் அலாதி மேன்மையுற்று இருந்தான் என்று சொல்லுகிருர்களே அது எப்படி?

**துரோணுச்சாரியர்:** ரகுராமன் முதலில் அஸ்த்ர சஸ்த்ர வித்தைகளை வசிஷ்டரிடமிருந்து கற்றுன். அதற்கு மேலுள்ள பகுதிகளை அவன் விசுவாமித்திரரிடமிருந்து கற்றுக்

கொண்டான். கடைசியாக அகஸ்திய மகரிஷியிடமிருந்து அந்தச் சாஸ்திரத்தின் முடிவான பகுதிகளையெல்லாம் கற்கலானன். சஸ்த்ரம் தாங்கியவர்களுள் தலை சிறந்தவன் தசரத ராமன் என்பது பிரசித்தம். தன்னுடைய திறமையனைத்தையும் ராமன் தர்ம பரிபாலனத்துக்கென்றே பயன்படுத்தினன். ராமபாணம் ஒரு நாளும் வீண்போனது கிடையாது. எல்லாச் சூழ்நிலைகளிலும் ராமன் கோதண்ட ராமனுகவே இலங்கினன். அரசன் ஒருவன் எந்தச் சந்தர்ப்பத்திலும் அறம் காப்பதற்கு ஆயத்தமாயிருக்க வேண்டும் என்னும் கோட்பாடு அதினின்று வெளியாகிறது.

### காட்சி 4.

(நதியில் நீராடிய துரோணுச்சாரியரின் காலை முதலை பிடித்துக்கொள்ளுகிறது. மாணுக்கர்களுக்கிடையில் ஒரே குழப்பம்.)

**துரியோதனன்:** அடடே, அங்கே பாருங்கள். ஆச்சாரியர் முதலையின் வாயில் அகப்பட்டுக் கொண்டார்.

**பீமன்:** நதியில் குதித்து அவரை மீட்டெடுக்கலாமா?

**ஜயத்ரதன்:** ஆச்சாரியரை மீட்டெடுத்தால் அவருடைய கால் போய்விடும்.

**பீமன்:** நாம் எல்லாரும் நதிக்குள் குதித்து முதலையின் அவயவங்களைப் பற்றிப் பிடிப்போம். அப்போது முதலை பயந்துபோய் ஆச்சாரியரின் காலை விட்டுவிடும்.

**துரியோதனன்:** அப்படிச் செய்யலாகாது. அதில் நமக்கு ஆபத்து இருக்கிறது. முதலை வாலால் ஒரு அடி அடித்தால் நம்முடைய கை கால்களெல்லாம் சிதறிப் போகும்.

**ஜயத்ரதன்:** ஐயோ, ஆச்சாரியர் அகப்பட்டுக் கொண்டாரே! நம்மால் ஒன்றும் செய்ய முடியவில்லையே! ஆச்சாரியரே, உங்களுக்கு உதவி தர எங்களுக்கு இயலவில்லை. எப்படியாவது உங்களைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள். எல்லாரும் ஒன்றுகூடி: ஐயையோ, ஆச்சாரியர் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டாரே! நாம் எல்லாரும் ஒன்றுகூடி அந்த முதலையைப் பிடிக்கும் திறமையற்றவர்களாக இருக்கிறோமே! ஓடிவாருங்கள்.ஓடிவாருங்கள். நாம் பலபேர் ஒன்று கூடி ஆச்சாரியரையும் முதலையையும் சேர்ந்தாற் போன்று தண்ணீருக்கு வெளியே தூக்கினல் முதலையின் வலிவு குன்றிப் போம். பிடிப்பையும் அது விட்டு விடும். ஆச்சாரியர் உயிர் தப்புவார். முதலையைக் கரைக்குத் தூக்கிவந்து கட்டிப்பிடித்து விடலாம். நிலத்துக்கு வந்த பிறகு அதனல் ஒன்றும் செய்ய முடியாது. அதனுடைய சாமர்த்தியமெல்லாம் தண்ணீருக்குள் இருக்கும் பொழுதுதான். வாருங்கள். வாருங்கள். முதலையைப் பிடியுங்கள். விட்டு விடாதீர்கள். தைரியமாயிருங்கள். இப்பொழுதே குதியுங்கள்.

அம்பையும் வில்லையும் ஏந்தியவனுக அர்ஜுனன் ஓடி வருகிறன். மாணுக்கர்கூட்டத்தைப் பிளந்துகொண்டு நதிக்கரையோரம்வருகிறன். முதலையின் அடிவயிற்றில் அம்பு ஒன்றை எய்கிறன். அது வாயைப் பிளந்துகொண்டு நீரினுள் ஆழ மூழ்கித் தப்பித்து ஓடுகிறது. அர்ஜுனன் ஆச்சாரியரைத் தூக்கி எடுத்துக் கரையில் வைக்கிறன். காலுக்குக் கட்டுப் போடுகிறன். பிறகு மாணுக்கர்எல்லாரும் ஆச்சாரியர் காலில் விழுந்து வணங்குகிறர்கள். தாங்கள் தப்பித்தது தெய்வாதீனம் என்று போற்றுகிறர்கள். புன்னகை பூத்தவராக ஆச்சாரியர் இந்த நிகழ்ச்சிகள் யாவையும் காணலுற்றர்.

### காட்சி 5

(துரோணுச்சாரியரும் அர்ஜுனனும் பேசிக் கொண்டிருக்கிறர்கள்.)

**ஆச்சாரியர்:** அர்ஜுனு! உன்னுடைய சமயோசித புத்தியைப் பெரிதும் பாராட்டுகின்றேன். ஆபத்து வாய்த்தவிடத்து மற்ற மாணுக்கர்கள் எல்லாரும் குழம்பிக் கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தார்கள். நீ ஒருவன் தான் மனம் கலங்காதிருந்து செய்யவேண்டிய செயலைத் திறமையோடு சாதித்தாய்.

**அர்ஜுனன்:** ஆபத்துவேளையில் அத்தகைய அமைதியான மன நிலையை நான் பெற்றது தங்களது அனுக்ரஹத்தால். ஆபத்து வேளையில் தைரியம் ஒன்றே நமக்குப் பெருந்துணைபுரிகிறது என்று தாங்கள் பாடம் புகட்டியுள்ளீர்கள். அதைப் பயன்படுத்துவதற்கு எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

**ஆச்சாரியர்:** உன்னை நான் கவனித்துப் பார்த்திருக்கிறேன். சந்தர்ப்பம் கிடைக்கிற பொழுதெல்லாம் அதை நீ வில் வித்தைக்கென்றே பயன்படுத்துகின்றய். அத்தகைய

நோக்கமும் ஊக்கமும் உனக்கு எப்படி வந்தன ?

அர்ஜுனன் : குருதேவா, தங்களுடைய வாழ்க்கை முறையை நான் கூர்ந்து கவனித்து வருகிறேன். ஒரு கணப்பொழுதையும் நீங்கள் வீண் போக்குவதில்லை. பயன்படுகிற நல்ல காரியங்களிலேயே நீங்கள் காலத்தை இனிது பயன்படுத்தி வருகிறீர்கள். நானும் அப்படியே செய்ய வேண்டுமென்னும் ஊக்கத்தை நான் தங்களிடமிருந்தே கற்றுக்கொண்டேன். வில் வித்தையில் எனக்கு விருப்பம் அதிகம். ஆதலால்தான் சிறிது நேரத்தையும் வீண்போக்காது அக்கலையை நான் பயின்று வருகிறேன்.

ஆச்சாரியர் : ஒருவனுடைய மன அமைப்பு எத்தகையது என்பதை அவன் தூங்குகிற பொழுது முகத்தைப் பார்த்துக் கண்டு பிடிக்கலாம். பல தடவைகளில் அந்த நோக்கத்தோடு உங்கள் எல்லாரையும் பார்க்க நள்ளிரவில் நான் வருவதுண்டு. நீயோ தனியாக இருந்துகொண்டு கார்இருளிலும் வில் வித்தை பயிலுகிறாய். அந்த எண்ணம் உனக்கு எப்படி வந்தது? இருள் சூழ்ந்த இரவு வில் வித்தைக்கு உதவாதே.

அர்ஜுனன் : நாங்கள் எல்லாரும் ஒரு தடவை இரவில் போஜனம் பண்ணிக்கொண்டிருந்த பொழுது தீபம் அணைந்து போயிற்று. அந்த இருளிலும் உணவைக் கையில் எடுத்து வாயில் வைக்க எனக்கு இயன்றது. இது சாத்தியமென்றால் இரவில் இதே பாங்கில் வில் வித்தையை நான் ஏன் பயிலலாகாது என்று எண்ணினேன். அம்முறையைப் பயிற்சி பண்ணி வருகிறேன். அதில் முன்னேற்றமும் அடைந்து வருகிறேன்.

ஆச்சாரியர் : மற்றொரு அதிசயத்தை உன்னிடம் நான் கண்டு வருகிறேன். நீ தனியாக இருந்துகொண்டு ஒரு தடவை வலக்கையில் அம்பு எய்துகின்றாய். அடுத்த தடவை இடக்கையில் அம்பு எய்துகிறாய். இப்படிக் கை மாறி மாறித் தனுர் வித்தை பயிலுவதின் நோக்கம் யாது ?

அர்ஜுனன்: இறைவா, ஒரு தடவை இறை வணக்கம் செய்தபொழுது கருத்து ஒன்று என் உள்ளத்தில் உதித்தது. கடவுளை வணங்குதற்கு இருகரங்களையும் ஒன்று கூப்பிப் பயன்படுத்துகின்றோம். கடவுள் வழிபாட்டுக்குப் பயன்படுகின்ற இடக்கை கலை வளர்ச்சிக்கு ஏன் பயன்படலாகாது? கலையை வளர்ப்பது கடவுள் வழிபாட்டுக்கு நிகர் அல்லவா ? வழிபாட்டுக்குப் பயன்படுகிற இருகரங்களையும் கலை வளர்ச்சியிலும் நான் பயன்படுத்திப் பழகுகிறேன்.

ஆச்சாரியர் : அர்ஜுனா, உன்னிடம் ஊக்கமும், உழைப்பும் ஒன்று சேர்ந்து அமைந்திருக்கின்றன. இது கிடைப்பதற்கரியபேறு. யார் ஒருவனுடைய உள்ளத்தில் ஊக்கம் ததும்பிக் கொண்டேயிருக்கிறதோ யார் ஒருவன் கை வண்ணத்தை அயராது பயன்படுத்துகிறானோ அவன் மேன்மையுறுவது திண்ணம். உன்னுடைய திறமையை முன்னிட்டு உன்னை நான் தலைமாணாக்கனாக ஏற்றுக்கொள்ளுகிறேன். தனுர் வேதத்தில் சில அரிய பெரிய நுட்பங்களை அலாதியாக உனக்கே கற்பிப்பேன். அப்படி நீ பெறுகிற திறமையை உலக நன்மைக்காக வென்றே பயன்படுத்துவாயாக. மற்றொரு ரகசியத்தை உனக்குப் போதிக்கிறேன் கேள். கிருஷ்ணனை உன்னுடைய மைத்துனன் என்று கருதுவது உலக நடைமுறை. உண்மையில் அவன் பரமாத்மாவின் அவதாரம். அவனை நீ அங்ஙனம் மனதால் வழுத்துதற்கேற்ப நீ மேன்மையுறுவாய்.

அர்ஜுனன் : குருதேவா, தாங்கள் என் மீது தயைவைத்து என்னைத் தலைமாணாக்கனாக ஏற்றுக் கொண்டதற்கும், கிருஷ்ணனுடைய சொருபத்தை உள்ளபடி எனக்குப் போதித்ததற்கும் நான் தங்களுக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும் !

(வீழ்ந்து வணங்குகிறான்)

ஆச்சாரியர் : முன்பு ஒரு தடவை உன்னிடம் குரு தக்ஷிணையாக நான் ஒன்றைக் கேட்டேன். துருபதனை உயிரோடு பிடித்து எனக்குத் தரவேண்டுமென்று வேண்டினேன். நீயும் அங்ஙனமே செய்து முடித்தாய். குருஸ்தானத்தில் இருப்பினும் அச்செயலுக்கு உனக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டவனாக இருக்கிறேன். இப்பொழுது உன்னைத் தன்னந்தனியனாக வைத்து மற்றொரு தக்ஷிணை கேட்கிறேன். அதைச் செலுத்த நீ மனமுவந்து முன் வருவாயா ?

(தொடரும்)

# மன்றுபறித்து உண்ணேல்

(சுவாமி துருவானந்தர்)

இவ்வுலகில் நான் அனுதையாகப் பிறந்தேன். என்னைப் பெற்றவர் யார்? பேணி வளர்த்துக் காத்தவர் யார்? என்று உறுதியாகக் கூறமுடியாது. எங்கெங்கோ திரிந்து அலைந்தேன். ஒரு பெரியவர் என் நிலையைக் கண்டு இரங்கினுர். வலங்கைமான் என்ற ஊரில் வழக்கறிஞர் ஒருவரிடம் என்னை ஒப்படைத்தார். புத்தி தீட்சண்யம் பெற்ற அந்தப் புத்தி சிகாமணி என்னை அவர் வீட்டில் வேலைக்கு வைத்துக்கொண்டார். அனுதையாக அலையாது, அவரது ஆதரவில் வளர்ந்து வந்தேன். அரிச்சுவடி முதல் அருட்பா வரை அனைத்தையும் அங்குக் கற்றேன். அந்தப் புத்திசிகாமணிக்குப் புதல்வர்கள் மூவர் இருந்தனர். தர்மம், சத்தியம், நேர்மை முதலிய நற்குணங்களை அம்மனிதரிடமும், அவருடைய மக்களிடமும் காணுதலரிது. பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஒரே வெறி பிடித்தவர்களாக அலைந்தனர். பிறரை மோசடி செய்து சம்பாதித்த பணத்தில் சிறுதொகையைத் திருப்பதி வேங்கடாசலபதிக்கு உண்டியலில்போட்டு விட்டால் தம்முடைய பாபங்கள் இறைவனுல் கழுவப்பட்டுவிடும் என்று வழக்கறிஞர் மனப்பால் குடித்து வந்தார். சகுனம் பார்ப்பதிலும் ஜோதிடத்திலும் மிகுந்த நம்பிக்கை உள்ளவர். என் தீவினைப்பயனுல் நான் அந்த வீட்டில் நுழைந்த ஒரு வாரத்திற்குள் அவ் வீட்டுத் தலைவி காலமானுள். இதனுல் மனம் உடைந்த அந்த வழக்கறிஞர் என் வருகையால்தான் அந்த வீட்டில் அத்தகைய இழப்பு ஏற்பட்டது என்று அங்கலாய்த்தார். பொறுமை புருஷ பூஷணம் என்பார்கள். அது எனக்கு அணிகலனுக இருந்ததால் மனம் தளராது இருந்தேன். கூர்மையான அறிவும், புத்தி சாமர்த்தியமும் இருந்ததால்பொய் வழக்குகளைத் திறமையாகக் கையாண்டு வெற்றியடைந்தார். இதன் விளைவாக ஏராளமாகப் பணம் குவிந்தது. நாட்டில் நீதி செத்து விட்டதே என நல்லவர் வருந்தினர். எந்தக் குற்றம் செய்தாலும் பணத்தை வைத்துத் தப்பித்து விடலாம் என்று பாப ஆத்மாக்கள் கருதினர். அரசன் அன்று கொல்லுவான்; தெய்வம் நின்று கொல்லும் என்பது முதுமொழி. பொய் சொல்லிப் பணம் பறிக்கும் இந்தப் பாவி மீது ஊர் மக்கள் வழக்குத்தொடுத்தனர். என் போன்ற துராத்மாக்கள் இருப்பதால்தான் அவருக்குத் துன்பத்துக்கு மேல் துன்பம் வருகிறது என்று என்னை வீட்டை விட்டுத் துரத்தினுர். அனுதையாக அலைந்த என்னை ஆண்டவன் ஒரு அடியார் வடிவில் தோன்றி ஆசிரமம் ஒன்றிற்குள் அழைத்துச் சென்ருர். மன அமைதியின்றி வாடுபவர்களுக்கு அருள் ஒளி சுரக்கும் அருளாலயமாக அது திகழ்ந்தது. உணவின்றி உழலும் வறிஞர்களுக்கு அது கற்பக தருவாக இலங்கியது. அவ் ஆசிரமத்தின் பெருமை நாடு முழுவதும் பரவியிருந்தது. அவருடைய கருணைக்கு இலக்கான நான் அந்த ஆசிரமவாசியானேன். அருளானந்த அடிகளார் என்று அனைவராலும் அன்போடு அழைக்கப்பட்டேன். ஆங்குப் பலர் வந்து தங்கினர். மன இருளகன்று உள் ஒளி பெற்றுச் சென்றனர். ஆண்டுகள் சில கடந்தன. தொழுநோயால் பீடிக்கப்பட்ட மனிதர் ஒருவர் வாயிலண்டை வந்து நின்ருர். இன்முகத்தோடு உள்ளே அழைத்துச் சென்று வேண்டிய உபசாரங்கள் செய்தேன். வந்தவர் ஏதேதோ பிதற்றினுர், கதறினுர், கண்ணீர் வடித்தார். உணவு ஏற்க மறுத்த அவர், தான்செய்த தவறுகளை எண்ணி எண்ணி விம்மினுர்.

விசித்திரமான அம்மனிதர் தம் வரலாற்றைப் பகர்ந்ததாவது: "என் வாழ்க்கை அழிக்கப்பட்ட சித்திரம் போன்றது. அதைக்கேட்டு ரசிக்க முடியாது. ஆனுல் என் வாழ்வுப் பாதையில் நான் சென்ற வழியில் நீங்கள் செல்லவேண்டாம் என வேண்டுகிறேன். பார்த்தனூர்தான் இந்த உடலைப் பெற்ற பாவத்தைச் செய்தது. அந்தணர் ஒருவருக்கு ஒரே மகனுகப் பிறந்த என்னைப் படிக்க வைத்து நீதிபதியாக்க விரும்பினர் பெற்ருேர். சட்டக்கல்லூரியில் பயின்று வந்தேன். சட்டக் கல்லூரிகளினின்று வெளி வருபவர்களுள் மகாத்மா காந்தி, சி. ஆர். தாஸ் போன்ற

பெரியவர்களும் உண்டு. என் போன்று சமுதாயத்தையே நாசமாக்கும் நாசகாரிகளும் உண்டு. எப்படியோ சட்டக்கல்லூரியில் பயின்று வழக்கறிஞனாக வெளிவந்தேன். என்னோடு இருந்த வழக்கறிஞர்கள் பலர் பொய்யும், புரட்டும் கொண்ட வழக்குகளை எடுத்து ஏராளமாகச் சம்பாதித்தார்கள். விரைவில் பணக்காரனாக வேண்டுமானால் அவர்களைப் போன்று நானும் அத்தகைய வழியில் செல்லவேண்டும் எனத் திட்டம் தீட்டினேன். என் மனநிலைக்கேற்பப் பொய் வழக்குகள் நிறைய வந்தன. பணமும் பெருகியது. இதனால் நல்லவர்களின் ஏச்சுக்கும் ஆளானேன். இந்நிலையில் எனக்கு விவாகம் நடந்தது. என் மனநிலைக்கேற்ற மக்கள் மூவர் பிறந்தனர். அவர்களை நன்கு படிக்க வைத்தேன். ஒருவன் மருத்துவனாகவும், மற்றொருவன் வியாபாரியாகவும், இன்னொருவன் அரசியலில் ஈடுபட்டு அமைச்சனாகவும் திகழ்ந்தனர். என்னைப் போல் அதிர்ஷ்டசாலி உலகில் யாருமே இல்லை என்று இறுமாப்பு எய்தினேன். ஒருநாள் சிறுவன் ஒருவனை அழைத்துக்கொண்டு பெரியவர் ஒருவர் வந்தார். அனாதையாக இருந்த அவனை எப்படியேனும் வீட்டில் வைத்து ஆளாக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். பையனாக வந்தவன் எமனாக இருப்பான் என்று நான் நினைக்கவில்லை. அவன் வந்த சில நாட்களில் என் துணைவி மாண்டாள். அதன் பிறகு ஊர் மக்கள் என்மீது ஊழல் குற்றம்சாட்டி நீதிமன்றத்தில் வழக்குத்தொடுத்தனர். மனநிம்மதியை இழந்த நான் இரத்த அழுத்த நோய்க்கு ஆளானேன். டாக்டராகவிருந்த என் முதல் மகன் என்னை நன்கு கவனித்து வந்தான். அனாதைச் சிறுவனின் வருகையினால் அடுத்தடுத்து வீட்டில் துன்பங்கள் உண்டாகின்றன என்று எண்ணி அவனை வீட்டைவிட்டுத் துரத்திவிட்டேன். தனிமையில் இருந்தபோது என் மனம் நான் பண்ணியஅக்கிரமச் செயல்களைக் குத்திக் காட்டியது. அநியாய முறையில் பணத்தைப் பறித்த செயல் ஞாபகத்துக்கு வந்தது. உடலில் தொழுநோயின் அறிகுறிகள் தென்பட்டன. மன்று பறித்து உண்ட கொடுமைக்கு ஆண்டவன் சரியான தண்டனை கொடுத்துக் கொண்டிருக்கிறான் எனக் கண்ணீர் விட்டேன். இனி அங்கிருந்தால் மகனுக்கும் மற்றவர்களுக்கும் சுமையாக இருக்க நேரிடும் என்று இரவோடு இரவாக யாரிடமும் சொல்லாது அங்கிருந்து வெளியேறினேன்.'' இங்ஙனம் அவர் தம் வரலாற்றை முடித்ததும் ஆசிரம வாசிகளுள் ஒருவர் தம் வரலாற்றைப் பகர்ந்ததாவது:

''ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன் என்னும் பழமொழி என் விஷயத்தில் உண்மையாகப் போய்விட்டது. டாக்டர் வேலைக்கே தகுதியற்ற என் போன்றவர்கள் பலர் இருப்பதால்தான் நாட்டில் புதிய நோய்கள் பெருகிக்கொண்டு இருக்கின்றன. டாக்டர் வேலையை வேப்பமரத்தோடு ஒப்பிடலாம். வேம்பு எல்லார்க்கும் எப்படிப் பல வகைகளில் பயன்படுகிறதோ அப்படி டாக்டர் வேலையும் எல்லா உயிர்களுக்கும் உதவும் சஞ்சீவி போன்றது. ஆனால் சுயநல உணர்ச்சி பெருகிப் பணம் சம்பாதிப்பதற்கு மட்டும் ஒருவன் அதைப் பயன்படுத்துவானாகில் வேம்பைப் போன்ற கசப்பைத்தான் மக்கள் மத்தியில் அவன் பெறுவான்.

பத்தாயிரம் ரூபாய் லஞ்சம் கொடுத்து மருத்துவக் கல்லூரியில் இடம் பெற்றேன். லஞ்சமாகக் கொடுத்த பணமனைத்தும் என் தந்தை ஏழைகளின் நிலத்தைவஞ்சித்துப்பெற்றபணம். ரத்தக்கொதிப்படைந்த தந்தை என் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்தார். மருத்துவருக்கு இருக்கவேண்டிய தயாள சிந்தை, இரக்கம்,கருணை முதலியன அணுவளவும் என்னிடம் இல்லை. அலோபதி, ஹோமியோபதி, நேச்ரோபதி என்று எத்தனை மருத்துவ வகைகள் இருந்தாலும் Sympathy இருக்கவேண்டும். அதாவது இரக்கம், அனுதாபம் இருக்க வேண்டும். அது இல்லையென்றால் மற்ற மருந்துகள் இருந்தும் வீண்தான். நான் அரசினர் மருத்துவமனையில் வேலை பார்த்தாலும் தனிப்பட்ட முறையில் வீட்டில் மருத்துவமனை ஒன்று நடத்தி வந்தேன். இதற்கு வேண்டிய மருந்துகளை விலைக்கு வெளியே வாங்கவேண்டிய நிலை எனக்கு ஏற்படவில்லை. இதனால் எனக்கு நிரம்ப வருமானம் வந்தது. இப்படி வருமானம் வந்தால் எந்த டாக்டராவது கிராமத்திற்குப் போய் வேலைசெய்யவிரும்புவாரா? புதிதாகக் கல்வி கற்றுவந்த இளம் டாக்டர்

களின் உதவியோடு என் தந்தைக்குச் சிகிச்சை அளித்து வந்தேன். நாளுக்கு நாள் அவர் உடலில் தொழுநோய் ஏற்படக் கூடிய அறி குறி தென்பட்டதை எண்ணி வருந்தினேன். வேலைபார்த்து வந்த இடத்திலிருந்து மருந்தைக் கடத்தி வந்து என் தந்தைக்குச் செலுத்தியது இப்படி விபரீத விளைவை உண்டு பண்ணியது. மருந்தில் கலப்படம் செய்து அம்மருந்தைக் குறைந்த விலையில் விற்ற ஒரு கூட்டத்தைப் போலீஸார் பிடித்தனர். ஆனால் அதன் தலைவன் தலைமறைவாகி விட்டான் என்பதையும், அதன் தலைவன் மருந்து வியாபாரம் செய்து வந்த என் தம்பிதான் என்பதையும் பத்திரிகையில் பார்த்ததும் இனி, இவ்வுலகில் வாழக்கூடாது என்று இங்கு ஓடி வந்து விட்டேன்.'' ஆசிரமத்திலிருந்த இரண்டாமவன் பகர்ந்ததாவது: ''எந்த முறையைக் கையாண்டாவது குறுக்குவழியில் என் தந்தையைப் போன்று நிறைய சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணமிருந்தது. எனக்குள்ள சொத்தைப் பிரித்து வாங்கிக்கொண்டு ஒரு நூதன வழியில் பிரவேசிக்கத் திட்டமிட்டேன். ரசவாத வித்தை தெரிந்தால் தாமிரத்தைத் தங்கமாக்கலாம் என்று ஒரு புத்தகத்தில் முன்பு படித்திருந்தேன். ஆகவே ரஸவாத வித்தைகளைத் தெரிந்த சித்தர்களை, மந்திரவாதிகளைத் தேடுவதில் அலைந்தேன். பணமும், காலமும் வீணானமை தான் கை கண்ட பலன். பிறகு சிறிதும் மனம் தளராது குறுக்கெழுத்துப் போட்டி, லாட்டரிசீட்டு வாங்குதல் முதலியவற்றில் ஏராளமான பணத்தைக் கொட்டி ஏமாந்தேன். பிறகு மருந்துகளைத் தயாரித்து டாக்டராகவிருந்த சகோதரருக்கு வழங்க விரும்பினேன். நான் செய்த கலப்பட மருந்து முதலில் எனது சகோதரனின் மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டது. என் தந்தையும் மற்றுமுள்ளவர்களும் அதனால் பாதிக்கப் பட்டதை அறிந்த போலீசார் கடையிலுள்ளவர்களைக் கைது பண்ணினர். ஆனால் நானே தலைமறைவாகி இங்கு வந்துவிட்டேன்.''

ஆசிரமத்திலிருந்த மூன்றாமவன் பகர்ந்ததாவது: ''மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல் என்றார் சான்றோர் ஒருவர். ஆனால் நான் அங்ஙனம் நடந்து கொள்ளவில்லை. 'மக்களுக்குச் சேவைசெய்யவே நான் அமைச்சராக விரும்புகிறேன்' என்று பலர் கூறுகிறார்கள். அவர்கள் சொல்லியபடி செயல்படுதல் வேண்டும். நேர்மையானவர்கள், சத்தியமே பேசுகிறவர்கள் இந்தப் பதவிக்கு வரவேண்டும். வெறும் வாய்ப்பந்தலால் மக்களைக் கவர்ந்து இவ்வுலகத்தைப் பெரிய சொர்க்கமாக நான் ஆக்குவேன் என்று ஆசை காட்டுகிற என் போன்றவர்கள் இந்தப் பதவிக்கு வந்தால் பெரும் கொள்ளை அடிப்பார்கள். நான் அமைச்சரானதும் எனக்குரிய வசதிகளைப்பெருக்கிக்கொண்டேன். என் கட்சிக்காரர்களைமட்டும் ஆதரித்து மற்றவர்களைப் புறக்கணித்தேன். மக்களுக்கு நலன் செய்யும் செயல்களிலிருந்து தவறினேன். என்போக்கைக்கண்டு மக்கள் கொதிப்படைந்தனர். மக்களின் வெறுப்புக்குள்ளான நான் மந்திரி பதவியை ராஜினமா செய்துவிட்டேன்.''

இங்ஙனம் மன்றுபறித்துவாழ்ந்த தந்தையும், அவரது மூன்று மக்களும் அவலநிலைக்கு ஆளாயினர். மன்று பறித்து வாழ்ந்ததால், குஷ்டரோகியாக இருந்தவர் இப்பொழுது யாரை வீட்டை விட்டுத் துரத்தினரோ அவருடைய அணைப்பில் வாழவந்துள்ளார். துரத்தப்பட்ட அனாதைச் சிறுவர்தாம் அருளானந்தர் ஆவார். டாக்டர் தொழில் புரிந்தவரும், கலப்படம் செய்து மருந்து விற்றவரும், அமைச்சராக இருந்தவரும் குஷ்டரோகியின் மக்களாவார்கள். அவர்களையும் அருளானந்தர் ஆதரித்தார். தான் விரட்டி ஓட்டிய அனாதைச் சிறுவன்தான் அருளானந்தராக இருந்து தன்னையும், தன் மக்களையும் ஆதரிப்பதை அறிந்த குஷ்டரோகி தன் சிறுமையையும் அருளானந்தரின் பெருமையையும் எண்ணிப் பார்த்தான். நால்வரும் அருளானந்தரின் கால்களில் விழுந்தனர். தங்களுடைய குற்றத்துக்கு மிகவும் வருந்தி வேதனைப்பட்டனர். அவர்களுக்குப் புனர்வாழ்வு தந்து அவர்களை நல்வழிக்குத் திருப்பினர் அருளானந்தர். 'முற்பகல் செயின் பிற்பகல் விளையும்' என்னும் பொன்னுரை பொய் போகாது என்பதையும், 'மன்று பறித்துண்ணேல்'என்னும் மூதுரையையும் இந்நால்வர் வாழ்வும் விளக்குகின்றன என்றார் அருளானந்தர்.

---

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

"நுணலும் தன் வாயால் கெடும்" என்ற புலவரின் மொழி அனுபவ மொழி. நாவிலே கலைமகள் வீற்றிருக்கின்ருர் என்று சொல்லுவதும் பொருள் பொதிந்த மொழி.

நாக்காகவும் இறைவன் திகழ்கிருன் எனச் சுந்தரர் சொன்னதால் இவையாவற்றையும் நம் சிந்தனைக்குக் கொண்டு வருதல்வேண்டும். சிந்தித்து வாழ்க்கையில் கடைப் பிடித்தால் இருவித அபிப்பிராயங்களுக்கு இடமில்லை. வீண் பேச்சு வராது அவரவர் கடமையைத் தவருது ஆற்றுவார்கள்.

செவியாகவும் இறைவன் திகழ்கிருன். செவியோடு சேரும் செல்வம் சிறந்தது. செவியால் நல்லனவற்றைக் கேட்டல் வேண்டும். அப்படியானல் மனம் திருந்தும். "செவியறிவுறூஉ" என்று ஓர் இலக்கண முறை உண்டு. வேம்பும், கரும்பும் போல இருப்பினும் நல்லனவற்றைச் செவியால் கேட்கும்படி சொல்லுதல் நம் மரபு. கேட்பது மனது தான். இருப்பினும் செவிக்குச் சொன்னலே போதும். அது மனத்துக்கு உணர்த்தி விடும். செவி கேட்டதைத் தானே மனம் சிந்திக்கும். ஆகவே செவிக்கு முதன்மை கொடுக்கப்பட்டது. இறைவன் செவியாக இருந்தால் நல்ல செய்திதான் காதுக்கு வரும். நல்ல செய்திதான் வரவேண்டும்.

எதைச் செவியால் கேட்கவேண்டுமோ அதைச் செவிமடுத்தால் போதும். நன்மை தராத, நமக்கு வேண்டாத செய்திகளை நாம் காதில் வாங்கிக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. பொருத்தம் இல்லாத உணவு உடம்புக்குள்ளேபோனல் உடல் நோயை உண்டாக்கும். அதுபோல, பொருத்தம்இல்லாதகேள்விகள் மனத்துக்குள்ளே போனல் மனநோய் உண்டாகும்.

இறைவன் கண்ணுகவும் இருக்கிருன். கண்ணைப் போல் சிறந்த உறுப்பு வேறு எதுவும் இல்லை. காண்பது எதுவோ அது கண். காண் என்பதில் இருந்துதான் கண் என்ற சொல் தோன்றியது. காண் என்பதில் இருந்துதான் காட்சி என்ற சொல்லும் தோன்றியது. காணத் தகுதியுடையது எதுவோ அதுதான் காட்சியாகும். நன்மை தருவனவற்றைக் காண்பதெல்லாம் காட்சியாகும். சினிமாக்காட்சி காட்சியாகாது. உலகத்தில் எத்தனையோ "காட்சிகள்" நடைபெறலாம். அவற்றைக் காணுது ஒதுங்கியிருந்தனர் தவமுனிவர்கள். இக்காலம் அங்ஙனம்இயலாது. எனினும் நல்லனவற்றைக் காண்பது; நல்லன எனச் சான்ருேர் கூறியவற்றைக் காண்பது என்ற வரையறையினை வைத்துக் கொள்ளல்வேண்டும். ஞானக்கண்ணுகிய அகக்கண் வருகின்ற வரையிலும் முகக்கண்ணைக் கவனமாகப் பேணவேண்டும். "முகத்தில் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்" எனத் திருமூலர் அறிவுறுத்துவதை நினைவிற் கொள்ளல்வேண்டும்.

"எனக்கு இந்த மூன்று உறுப்புகளுமாகச் சிவனே நீயே இருக்கிருய்" என்கிருர் சுந்தரர்.

அப்படியானல் என்ன கருத்து? எனது நாக்கு தூய்மையான நாக்கு. உன்னைத் தவிர வேருென்றும் பேசியறியாது. எனது செவி நல்ல செவி. உன் புகழ் மொழிகளையன்றி வேறு ஒன்றையும் கேட்டு அறியாது. எனது கண் நல்ல கண். உன்னைத் தவிர வேறுஒன்றையும் கண்டறியாது என்பதை நமக்கு உணர்த்துகிருர்.

நாமும் நமக்கு வாய்த்த இவ்வுறுப்புக்களை எப்படி வைத்துக்கொள்ள வேண்டும் என உணர்ந்துகொள்கிருேம்.

கண்ணை மூடி, வாயை மூடி, செவிப் புலன்களை அடக்கித் தியானமூர்த்தியாகத் திகழ்கிருர் தட்சிணுமூர்த்தி. கடவுளே அப்படி இருக்கும்போது நாம் இருக்க வேண்டாமா?

சமீப காலங்களில் பள்ளிக் கல்விப் பயிற்சியில் தியானத்திற்கும், யோகப் பயிற்சிக்கும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வருவதை நாம் காண்கிருேம். மிகப் பழங்காலத்திலிருந்து செய்து வந்ததை இப்போதாவது மீண்டும் நடைமுறைக்குக் கொணர்தல் வேண்டும்.

நம் சரீரத்தைப் பஞ்ச பூதங்களோடு தொடர்புபடுத்திக் கூறுவார்கள். நாக்கை

அப்பு பாகமாக—நீர்ப்பகுதியாகக் கூறுவார்கள். நாக்குச் சுவையறிவது. நாக்கோடு சேர்ந்த உமிழ் நீர் சுவையறிய உதவுகிறது.

செவியை ஆகாயமாகச் சொல்லுவதுண்டு. ஆகாயத்தின் தன்மாத்திரை ஓசை. செவியின் மூலமாக ஓசையைக் கேட்கிறோம்.

கண்ணிலே ஒளியுண்டு. கண் தேஜோ பாகம். ஒளிப் பகுதி.

பஞ்ச பூதங்களோடு தொடர்பு உடையவை இவ்வுறுப்புக்கள். பஞ்சபூதங்களோடு தொடர்பு உடையவன் இறைவன்.

இறைவனையும் இவ்வுறுப்புக்களையும் இணைத்துப் பாடியுள்ளார் சுந்தரர்.

செவியால் உன் புகழைக் கேட்டேன்; கண்ணால் உன்னைக் கண்டேன்; நாவால் உன் புகழைப் பாடினேன். ஆகவே எனக்கு அருள் செய்க என இறைஞ்சுகின்றார் சுந்தரர்.

காஞ்சீபுரத்தில் அமைந்துள்ளது ஏகாம்பரநாதர் திருக்கோயில். இக்கோயிலுக்கு மேற்கே "சர்வதீர்த்தம்" குளம் அமைந்துள்ளது. இக்குளத்திற்கு அரைமைல் தொலைவில் உள்ளது திருஓணகாந்தன் தளி என்ற தலம். தளி என்றால் கோயில் என்பது பொருள். கற்றளி-கற்கோயில். ஓணன், காந்தன் என்னும் அசுரர்கள் வழிபட்டுப் பேறு பெற்றனர். இக்காரணத்தால் திருஓணகாந்தன் தளி என்ற பெயர் வந்தது. இங்கே இரண்டு திருக்கோயில்கள் தனித்தனிப் பிரகாரத்தோடு இருக்கின்றன. இறைவனின் திருப்பெயர் ஓணேஸ்வரர், காந்தேஸ்வரர். இறைவி திருநாமம்-காமாட்சியம்மை.

பல தலங்களையும் வழிபட்டு வந்த நம் சுந்தரர் இங்கே எழுந்தருளி வந்து பதிகம் பாடினார். பொன்னும் பரிசாகப் பெற்றார். அவர் பாடிய பதிகம்:

"நெய்யும் பாலும் தயிரும் கொண்டு
நித்தல் பூசனை செய்ய லுற்றார்
கையில் ஒன்றும் காணம் இல்லைக்
கழல்அடி தொழுது உய்யின் அல்லால்
ஐவர் கொண்டு இங்கு ஆட்ட ஆடி
ஆழ்குழிப் பட்டு அழுந்துவேனுக்கு
உய்யுமாறு ஒன்றுஅருளிச் செய்யீர்
ஓண காந்தன் தளியுளீரே."

—திருவோண காந்தன் தளி என்னும் திருக்கோயிலில் வாழும் பெருமானே! நெய், பால், தயிர் ஆகியவற்றைக் கொண்டு உம்மை நாள்தோறும் வழிபாடு செய்யும் அடியார்களின் கையில் காசு (காணம்) ஏதும் இல்லை. ஐம்புலன்களாகிய ஐந்து எஜமானர்கள், இவ்வுலகத்தில் என்னை ஐந்து பக்கமும் இழுத்துச் சென்று அலைக்கழிக்கின்றனர். அவர்களுடைய அலைக்கழிப்பில் அகப்பட்டு மீள முடியாது அழுந்தித் தவிக்கின்றேன். உமது திருவடிகளை வணங்கி, ஏதாவது பெற்றால்தான் அத்துன்பத்திலிருந்து மீளமுடியும். அவ்வாறு மீள்வதற்கு நீர்தாம் அருள் செய்தல் வேண்டும்.

"நெய்யும் பாலும் தயிரும் கொண்டு நித்தல் பூசனை செய்யலுற்றார்."—இறை வழிபாட்டில் நான்குவகை சொல்லுவார்கள். சரியா பூஜை, கிரியா பூஜை, யோக பூஜை, ஞான பூஜை என்பன அவையாகும். அவரவர்களின் மனப்பக்குவ நிலைக்கு ஏற்றவாறு பூஜை முறைகளை அமைத்துக்கொள்ளலாம். இறைவனிடத்தில் பக்தியைக் காட்டுவதில் பல படித்தரங்கள் உண்டு. மனப்பக்குவம், சூழ்நிலை ஆகியவற்றைப் பொறுத்து, பக்தியைக் காட்டுகின்ற முறையும் வேறுபடும்.

சுவாமியை ஆவாஹனம் செய்து, அபிடேகம் செய்து, அலங்காரம் செய்து, தூபதீபம் காட்டி, மந்திரம் சொல்லும் வழிபாடு செய்தல் கிரியா பூஜை எனப்படும்.

நெய், பால், தயிர், தேன், நல்லெண்ணெய், இளநீர் முதலியன அபிடேகப் பொருள்கள் ஆகும். ஆத்மார்த்த பூஜை பரார்த்த பூஜை எனப் பூஜை இருவகைப்படும். பிறருக்காகச் செய்வது பரார்த்த பூஜை. தனக்காகச் செய்வது ஆத்மார்த்த பூஜை.

ஆத்மார்த்த பூஜை செய்வதற்கு நேரமும், பொருள் வசதியும் வேண்டும். வசதியுடையவர்கள் இவ்வாறு கிரியைகள் செய்து பூஜை செய்யலாம்.

பழனி தண்டாயுதபாணி விக்ரஹம் போக முனிவரால் நவபாஷாணங்களைக் கொண்டு அமைக்கப்பெற்றது. நவபாஷாணங்கள் உடல் நோயைப் போக்கி நலம் கொடுக்கும் மருந்து பொருள்கள் ஆகும். தேனும் பழமும் கலந்த பஞ்சாமிர்தத்தைத் தண்டபாணிக்கு அபிடேகம் செய்து பக்தர்களுக்கு வழங்குகிறார்கள்.

அதனை உண்பவர்களுக்கு உடல் நலம் ஏற்படுகிறது.

இறைவனுக்கு அபிடேகம் செய்யப்பட்ட பால், தயிர் முதலியனவும், படைக்கப்பட்ட நைவேத்தியங்களும் அன்பர்களுக்கு வழங்கப்படுகின்றன. இறைவன் சாந்நித்தியத்தில் அவை படைக்கப்படுவதால், அருள் பிரசாதங்கள் ஆகின்றன.

உணவைச் சமைத்துப் பரிமாறுகின்றவர்களின் மூலமாக அவர்களின் சில பண்புகள், நுட்பமான முறையில், உணவை உண்பவர்களுக்குச் செல்லுகின்றன. நல்லவர்கள் சமைத்துப் பரிமாற உண்டால் அது நல் உணவாகும். உண்பவர்க்கும் தீமை இல்லை. தீயவர்களாக இருந்தால் இது தீய உணவாகும். அவ்வுணவை உண்பவர்களுக்கும் அதனால் கேடு ஏற்படலாம்.

நல்ல குணம் உடையவர்கள், நல்ல எண்ணத்துடன் இறைவனுக்குப் படைத்த, அபிடேகம் செய்த பொருள்கள் அன்பர்களுக்கு வழங்கப்படுவதால், அருள்நிறைந்த சூழ்நிலை ஏற்படுகிறது. பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டவர்களுக்கும் நலன் ஏற்படுகின்றது.

''கையில் ஒன்றும் காணம் இல்லை'' — காணம் என்பது பொற்காசு. எம்பெருமானே! நெய், பால், தயிர் ஆகியவை கொண்டு உன்னை வழிபாடு செய்கின்றவர்களின் கையிலே காசு ஒன்றும் காணப்படுவதில்லையே!

சுந்தரர் காலத்தில், மக்களைப் பக்தி மார்க்கத்தில் ஈடுபடச் செய்வது அவசியமாக இருந்தது. அவர்களைப் பக்தி மார்க்கத்தில் ஈடுபடுத்துவதற்குக் கிரியா பூஜை உறுதுணையாக இருந்தது. லௌகீகத்தில் ஈடுபட்டு உழலும் மனதில் அமைதி இருக்க நியாயம் இல்லை. அமைதி இல்லாத மனதைக்கொண்டு யோக மார்க்கத்திலே ஈடுபட முடியாது. அவர்களுக்குக் கிரியா பூஜை முறையே ஏற்றதாகும்.

ஆகவே, திருக்கோவில்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பது, இறைவனுக்கு அபிடேக அலங்காரங்கள் செய்வது, தூப தீபாராதனை காட்டுவது ஆகிய கிரியை முறைகளில் இறை வழிபாடு செய்து வந்தார்கள்.

ஆலயங்களும், விக்ரஹங்களும், உருவ வழிபாட்டு முறைகளும் மக்களின் உள்ளங்களில் தூய உணர்வுகளைத் தட்டி எழுப்புகின்றன. அவ்வாறு எழுப்புவதன் மூலம் சமூகத்திற்குப் பல நற்பணிகள் ஏற்படுகின்றன. இறைவன் அருகில் அனைவரும் செல்லுவதற்கான நற்பேற்றினை இவ் அருள்பணிகள் நல்குகின்றன. ஆன்மீகத்துறையில் முன்னேறுவதற்கு உறுதுணை புரிகின்றன. கர்வம், பேராசை, தீச்செயல்கள் யாவும் மறைகின்றன. கடவுளுக்குப் பயப்படுதல், பெரியவர்களுக்கு மரியாதை காட்டுதல், பாவச் செயல்களுக்கு அஞ்சுதல் ஆகிய அரும் பண்புகள் ஏற்படுகின்றன.

''கழல் அடி தொழுது உய்யின் அல்லால், ஐவர் கொண்டு இங்கு ஆட்ட ஆடி ஆழ்குழிப் பட்டு அழுந்துவேனுக்கு உய்யுமாறு ஒன்று அருளிச் செய்யீர்.''

இவ்வுலகில், ஐம்புலன்களாகிய எஜமானர்கள் என்னைப் படாதபாடு படுத்தி ஆட்டி வைக்கின்றவாறு நானும் ஆடுகிறேன். வாழ்க்கையாகிய பள்ளத்தில் அகப்பட்டு அழுந்தி வருந்துகிறேன். உமது திருவடிகளை வணங்கிப் போற்றிக் கடைத்தேறுவதை விட எனக்கு வேறு வழியில்லை. நீர்தாம் அருள் செய்தல் வேண்டும் என்கிறார் சுந்தரர்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவை ஐந்து பொறிகள். ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை ஆகியவை ஐம்புலன்கள். ஐம்பொறிகள் வாயிலாக ஐம்புல இன்பங்களை அனுபவிக்கின்றோம். மெய்யினால் அதாவது உடம்பினால் ஊறு என்ற இன்பத்தை (ஸ்பரிஸ உணர்ச்சி) அனுபவிக்கிறோம். வாயால் சுவை உணர்வைத் துய்க்கிறோம். கண்ணால் பார்க்கிறோம். மூக்கால் நுகர்கிறோம். செவியால் கேட்கிறோம்.

கடவுளால் படைக்கப்பட்ட எந்தப் பொருளும் நன்மையே பயக்கும். தீமை தருவதற்காக எப்பொருளும் உண்டாக்கப்படவில்லை. மின்னலின் பளீர் ஒளியும், இடியின் அச்சுறுத்தும் ஓசையும் மக்களுக்குத் தீமை தருவதற்காக விளைபவையல்ல.

ஐம்பொறிகளும் மக்கள் நலத்துக்காகவே அமைக்கப்பட்டவை. மனிதன் தனது அறிவுக் கோணலால் சிலவற்றைத் தவறாகப் பயன்படுத்துகிறான். வினையும் தவறாக அமைந்து விடுகிறது. மெய்யின் இயக்கம் நன்மைக்காக அமைக்கப்பட்டுள்ளது. ஓரிடம் விட்டு ஓரிடம்

பெயர்தல் என்ற இயக்கம் இல்லாத தாவர இனங்கள் நிழல் தந்து, இலை தந்து, பூ, காய், கனி தந்து நன்மை செய்கின்றன. இவற்றை நாடிச் செல்வோருக்கே நன்மை செய்யும். மனிதன் இயக்கம் உடையவன்; பலரையும் தேடிச் சென்று அவன் உதவி புரிதல் வேண்டும் என்பதற்காகவே உடம்புக்கு இயக்கத்தைத் தந்திருக்கிறான் இறைவன். உடம்பு தூயதாக இருந்தால் உள்ளமும் தூயதாக இருக்கும். அதனால் செய்யும் செயலும் தூயதாகஇருக்கும்.

பகுத்தறிவு அற்ற உயிர்களுக்குப் பேசும் சக்தியுடைய வாய் இல்லை. ஏன்? பகுத்தறிவு இல்லாத காரணத்தால், தாம் பேசுகின்ற பேச்சை ஒருவேளை தவறாகப் பயன்படுத்தக் கூடும் என்பதறிந்தே பேசும் வாயைத் தரவில்லை. பேசும் ஆற்றலை உடைய மனிதன் பிறருக்குத் தீமை தராத சொற்களையே பேச வேண்டும். நினைத்தபடியெல்லாம் பேசுதல் தவறு. வாய் அடக்கம் வேண்டும் என்பார்கள். பேசுவதற்கும் வாய் அடக்கம் வேண்டும். உணவு உண்பதற்கும் வாய் அடக்கம் வேண்டும். உடலுக்குத் தேவையானது சத்து நிறைந்த உணவே; சுவையான உணவு அன்று. சுவையும் துணையாக இருக்கலாம். சுவைக்கு முதல் இடம் கொடுத்து, நாச்சுவை உணர்வதிலேயே நாட்டம் கொள்ளக்கூடாது. உணவுக்கும் உணர்வுக்கும் தொடர்பு உண்டு. நல்ல உணர்வு தரும் உணவையே உண்ணுதல் வேண்டும்.

கண்ணுக்கு உரிய வடமொழிச் சொல் நயனம். நயதி என்ற சொல்லில் இருந்து நயனம் என்பது வந்தது. நல்லவற்றிற்கு அருகில் அழைத்துச் செல்வது நயதி. அப்படியானல், நல்லதைக் காண்பதற்கே கண் அமைந்துள்ளது என்பது புலனாகிறது. தமிழில், காண், காட்சி என்ற சொற்கள் நல்லதைக் காண்பது என்ற பொருளை உணர்த்துகின்றன. கண் என்பதில் இருந்து இச்சொற்கள் உண்டாயின. மனிதனுக்கு அமைந்துள்ள கண் அவனை நல்வழிப்படுத்தவே அமைந்துள்ளது. விரும்புகின்ற அனைத்தையும் காண விரும்புவது பொருந்தாது. அறிவுக்கும் நியாயத்துக்கும் பொருத்தமானவற்றையே கண் காண வேண்டும். அறிவுக்கும் கண்ணுக்கும் தொடர்பு உண்டு. கண் உடையர் என்போர் கற்றோர் என்பது மூதுரை. அறிவினை உடையவர் கற்றோர். கற்றோர்க்கு இருப்பதே கண். நியாய உணர்வு இருப்பவர்களுக்கு இருக்கும் கண்ணே உண்மையான கண். நியாயம் தவறுபவனை "உனக்குக் கண் இல்லையா?" எனக் கேட்பதுண்டு.

மோந்து பார்க்க உதவுவது மூக்கு. சுவாசிக்க உதவுவது மூக்கு. நல்ல காற்றைச் சுவாசிப்பது உடல் ஆக்கத்திற்கு உதவும். மூச்சுக்கும் சிந்தனைக்கும் தொடர்பு உண்டு. மூச்சு நின்றுவிட்டால் சிந்தனை இல்லை. நல்ல சுவாசம் நல்ல சிந்தனையைத் தூண்டும். பிராணயாமம் நல்ல உடல் நலத்துக்கும், நற்சிந்தனைக்கும் உதவும். மூக்குக்கு நல்ல பயிற்சி கொடுத்தவர்கள் முனிவர்கள். சூழ்நிலை நன்கு அமைவதாயின் சுவாசமும் நன்கு அமையும்.

அனிச்சைச் செயல் என்றால் என்ன? நம் உடலில் அமைந்துள்ள உறுப்புகளில் சில நமது விருப்பப்படி இயங்காமல், தாமே இயங்கிச் செயற்படுவது அனிச்சைச் செயல் ஆகும். சில வகை உறுப்புகள் நம் விருப்பப்படியே இயங்கும். இயங்குகின்ற உறுப்புகளை நம் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ளவேண்டும். அவற்றின் விருப்பப்படியே அனுமதிப்பது வாழ்வு சிறப்பதற்கு உறுதுணை ஆகாது.

பஞ்சேந்திரியங்களை நல்வழியில் செலுத்துதல் வேண்டும். யானைப்பாகன் யானையை இடம் அறிந்து செலுத்துவான். அதுபோல, பஞ்சேந்திரியங்கள் தவறான வழியில் செல்லும் போது, அவ்வாறு செல்லவிடாமல் தடுப்பதே அறிவுடைமையாகும்.

மனம் நிர்மலமானது. தீய பலன்களைத் தரும் தவறான உணர்ச்சிகள் மனத்துக்கு வண்ணம் பூசி விருப்பு வெறுப்பு விளைவுகளைத் தோற்றுவிக்கின்றன. அதனால் மனம் அழுக்காகிவிடுகிறது.

விலங்குகளின்மனம் பந்தபாசங்களால் மிகுதியும் பாதிக்கப்படுவதில்லை. ஆனல் மனித மனம் அளவுக்கு மீறிப் பாதிக்கப்படுகிறது. அவ்வாறு பாதிக்கப்படுவதற்கு ஆதாரமாக உள்ள ஐம்புலன்களை மிகவும் கவனமாகப் போற்றவேண்டும்.

நம்மிடம் அடைக்கலமாகக் கொடுத்த

பொருள்களைப் போற்றிப் பாதுகாத்து உரியவரிடம் ஒப்படைக்க வேண்டும். அதுபோல, நல்வழியில் செலுத்துவதற்காக இறைவனல் நமக்கு அருளப்பட்ட பஞ்சேந்திரியங்களைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும்.

சுந்தரர் இங்கே சொல்லுகின்ற பொழுது ஐம்பொறிகளும் என்னை ஆட்டிப் படைக்க அவ்வாறே, ஆடித் துயரக் கடலில் அகப்பட்டு வருந்துகிறேன். ஓண காந்தன் தளி எம்பெருமானே! நான் உய்யுமாறு நீதான் அருள்செய்தல் வேண்டும் என்கிறார்.

இங்கே சுந்தரருக்கு இறைவனுடைய சிந்தனை வருகிறது. இறைவனுடைய சிந்தனை ஏற்படுமானல் மனம் தூய்மையடையும். மனம் தூய்மையடைந்தால் பொறிகளையும், புலன்களையும் தன் வயப்படுத்திவிடலாம்.

வயிற்றுக்குப் பொருத்தமான உணவை உண்ணவேண்டும். பொருந்தாத உணவு கேடு தரும். நல்ல உணவு இல்லையே என வயிற்றைப் பட்டினி போடமாட்டார்கள். பொருத்தமான உணவைத்தான் உண்பார்கள். அதுபோல, மனதுக்கு நன்மைதரும் பொருத்தமான நற்சிந்தனைகளை முயன்று சிந்தித்தல் வேண்டும்.

ஊன்மிசை உதிரக் குப்பை
 ஒருபொருள் இலாத மாயம்
மான்மறித்து அனைய நோக்கின்
 மடந்தைமார் மதிக்கும் இந்த
மானுடப் பிறவி வாழ்வு
 வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆனல்வெள் ளேற்ற ஆரூர்
 அப்பனே அஞ்சி னேனே.''

—திருவாரூர் இறைவா! இறைச்சிக்கும், இரத்தத்திற்கும் பையாக விளங்குகிறது இவ்வுடம்பு. இதனை ஒரு பொருட்டாக மதிக்க முடியாது. மாயம் நிறைந்தது இவ்வாழ்வு. இம்மானுடப் பிறவியை நான் விரும்பவில்லை என்கிறார் சுந்தரர்.

ஊனும் உதிரமும், நரம்பும் கூடி அமைந்த இந்தப் பௌதிக உடம்பைப் பற்றி இறைவனடியார்கள் சிறிதும் கவலைப்படுவதில்லை. இறைவன் திருவடிகளை அடைவதற்கு இந்த உடம்பு ஒரு தடையாக இருப்பதாக அவர்கள் கருதினர்கள். உடம்பில் இருந்து உயிர் நீங்குகின்ற வரையில் உயிரைத் தாங்கி நின்ற உடம்பை ஒரு சிறையைப் போலக் கருதி வெறுத்தனர்.

உடல் எண்ணத்தை விட்டொழித்தால் உலக எண்ணங்கள் தாமாகவே மறையும். உலக எண்ணங்கள் மறைய உள்ளத்தில் உள்ளே பேரின்பம் ஓங்கும்.

---

# செய்திகள்

**நிகழ்பவை**

அக்டோபர் 18, 19, 20 தேதிகளில் தபோவனத்தில் சக்தி பூஜை அந்தர்யோகம் நடைபெறும். விபரம் சக்கரம் 26 ஆரம் 9 அட்டை இரண்டாம் பக்கத்தில் வெளிவந்துள்ளது.

அக்டோபர் மாதம் 20 ஆம் தேதி வியாழக்கிழமையன்று மாலை வித்யாவன குருகுல மாணவர்கள் குழுக்களாகச் சேர்ந்து ஸரஸ்வதி பூஜையைச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள்.

அக்டோபர் மாதம் 30ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று மதுரை பாண்டியன் நகரிலுள்ள விவேகானந்த விஹாரில் ஒருநாள் அந்தர்யோகம் நடைபெறும்.

**ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அக்டோபர் மாதம் 31ஆம் தேதி மதுரை ஜில்லா தேனியில் நாடார் சரஸ்வதி உயர்நிலைப்பள்ளியிலும், நவம்பர் மாதம் 5ஆம் தேதி சேலம் ஜில்லா தொ. சேடர்பாளையம் அரசினர் உயர்நிலைப் பள்ளியிலும், நவம்பர் மாதம் 7ஆம்தேதி திருச்சிஜில்லா துறையூர் செங்குந்தர் உயர்நிலைப்பள்ளியிலும் மாணக்கர்களுக்கு அந்தர்யோக முறையில் அறவுரை நிகழ்த்துவார்கள்.

ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுலப் பள்ளி மாணவர்கள் தீபாவளி விடுமுறைக்காக நவம்பர் மாதம் 3ஆம் தேதி வியாழக்கிழமை மாலை 3 மணிக்கு மேல் அவரவர்கள் ஊருக்குப் புறப்படுவார்கள்.

நவம்பர் மாதம் 6ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை இரவு 7-30 மணி முதல் 9 மணி வரை தாத்தையங்கார் பேட்டையில் **நித்தியானந்த சுவாமிகள்** அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றும் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பதினெனன்றும் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
ஸ்ரீ ராமகிருஷ்னர் உபதே[illegible]சரீ
ஆறும் பதிப்பு-பிரசார விலை ... 2-75
தினசரி தியானம்-பதினன்காம் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்னர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00
தாயுமானவர் இயற்றிய
பரிபூரணனந்தம் ஷை ... 3-00
கருணகரக்கடவுள் ஷை ... 2-00
மௌனகுரு வணக்கம் ஷை ... 1-50
பரசிவ வணக்கம் ஷை ... 0-50
விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
சந்நியாசி ... 1-25
பஜனைப் பாடல்கள் ... 1-25
குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
இராவணத் தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
ஹரிச்சந்திரன் (நா[illegible]) ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
அறம் வளர்த்த நம்பி ... 0-95
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80
நன்மக்களைப் பெறுதல் ... 0-80
தானவீரன் கர்னன் (நாடகம்) ... 0-80
பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ரூ. 0-80

பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறை வணக்கம் ... 0-75
*ஆத்ம சக்தி ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறர்களா? ... 0-75
*மனிதனது நிஜசொரூபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
ஸ்ரீ ராமகிருஷ்ணஷ்டோத்தர சத
நாமாவளி: ... 0-50
சைவன் யார்? ... 0-50
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) ... 0-15
The Bhagavad Gita (8th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 8-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (with plastic-cover) ... 4-50
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of Vivekananda (with plastic cover) ... 3-00
The Bhagavad Gita (Small Size) (With plastic cover) ... 3-00
Sri Vishnu Sahasranama Stotram ... 2-50
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபாற் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி Dt.

Edited by SWAMI NITHYANANDA,

Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.